# NEW TAMIL READER

(SIXTH STANDARD)

(ஏழாம் வகுப்பு)

BY

C. R. NAMASIVAYA MUDALIAR,

*Lecturer in Tamil, Queen Mary's College, Madras*







MADRAS:
OOMARASWAMY NAIDU & SONS
1925

[Price 7 As.

நூதன

# ஆறும் வாசக புஸ்தகம்

(ஏழாம் வகுப்பு)




மேரி யரசி கலாசாலைத் தமிழ்ப் பண்டிதர்
கா. நமச்சிவாய முதலியார்
எழுதியது

சென்னை:
ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்
1925

ரெஜிஸ்தர் செய்தது] [விலை 7 அணா

## பொருளடக்கம்



# நூதன
# ஆறாம் வாசக புஸ்தகம்

---

## 1. கல்விச் சிறப்பு - I

கடலுலகில் உற்றபொரு ளுக்குளே நன்மைதரு
கல்விநிலை பெற்றபொருளாம்
கனலினால் உருகாது புனலினாற் கரையாது
கள்வரால் திருடொணாது

திடமான ராஜாதி ராஜரா லும்மதைத்
தெண்டம் பிடிக்கொணாது
தேர்ந்துவரு துட்டராற் சேதமா காதொருவர்
செலவிடிற் குறைவுறாதாம்

அடமிகு சகோதரர்க் கிடமது கொடாததனை
அளவிடவு முடியாதுகாண்
அப்பொருளி னைப்பெறா திப்புவியி லலைகின்ற
அற்பருறு பயனென்கொலோ

கடகயம் உரித்துடலி னிற்றரித் திடுதேவ
கற்பக விராசமேவுங்
கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே
கயிலையங் கிரிவாசனே.

— கயிலாசநாதர் சதகம்.

## 2. கல்விச் சிறப்பு - II

இளமைப் பருவத்திலேயே, ஒருவன், கல்வியைக் கற்க வேண்டும்; கல்வியைக் கற்கச் சோம்பலுறு-பவன் பிற்காலத்தே தீராத வறுமையை அடைந்து வருத்தமுறுவான்.

2. கல்வியினல் நல்லறிவு மிகும்; அது நம் பெரி-யோர்கள் கைப்பற்றி நடந்த நல்லொழுக்கத்தில் நமது புத்தியைப் புகுத்தி, அவ்வொழுக்கத்தை அனுசரிக்கச் செய்யும்.

3. கணிதமும் இலக்கணமும் மாந்தர்க்கு இரண்டு கண்கள் என்று மேலோர் கூறுவர்; ஆதலால், கற்-ருேர் கண்ணுடையர் என்றும், கல்லாதார் கண்ணில்-லாக் குருடர் என்றும் கருதப்படுவர்.

> 'கண்ணுடையர் என்போர் கற்ருேர் முகத்திரண்டு
> புண்ணுடையர் கல்லாதவர்'

என்பது அதற்குப் பிரமாணமாம்.

4. நன்ருய்க் கற்றறிந்த அறிஞரை இவ்வுலகில் எவரும் அன்புடன் ஏற்று உபசரிப்பர்; அதனல், கல்வியாகிய கருந்தனத்தை எவரும் பெரிதும் முயன்று தேடக்கடவர்.

5. மணற் கேணியைத் தோண்டத் தோண்ட அதில் நன்னீர் ஊறுவதுபோலக் கல்வியைக் கற்கக் கற்க நம்மனத்தில் நல்லறிவு மிகும்.

> 'தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
> கற்றனைத் தூறும் அறிவு'

என்பது வேதவாக்கியம்.

6. கல்விச் செல்வமுடைய ஒருவன், வெகு தூரத்திலிருக்கும் அந்நிய தேசத்திலும், சுவதேசத்திற்போல, கவுரவிக்கப்படுகிறான்; அதற்கு அவன் கற்ற கல்வியே காரணமா யிருத்தலால், அத்தகைய கல்வியை எவரும் முயன்று கற்றல் இன்றியமையாதது என்று சொல்லவும் வேண்டுமோ!

7. ஒரு பிறப்பில் தான் கற்ற கல்வி, தன்னைத் தொடர்ந்துவரும் எழுபிறப்பிலும் தனக்குத் துணையாக நிற்கும் என்பர் பெரியோர்; அதனால் அக்கல்வி தனக்கு என்றும் பொன்றாத் துணையாதலை அறிந்து அதனைக் கற்கவேண்டும்.

'ஒருமையிற் றான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து'

என்பது மறைமொழி யன்றோ?

8. கல்வியினால் உண்டாகும் பயன் அதனைக் கற்றவனுக்கே யன்றி, அவனை யடுத்த மற்றவருக்கும் பயன்படுதல் அனைவரும் அறிந்த உண்மையன்றோ?

9. பிறருக்குக் கற்பிக்கின்றவர்களது கல்வியறிவு மேன்மேலும் வளர்ந்தோங்கும் என்பதற்கு ஒரு பிரமாணமும் வேண்டுமோ?

10. நல்ல நூல்களைக் கற்று, அவற்றில் சொல்லி யிருக்கும் விதி விலக்குகளை அறிந்து, அவற்றின்படி நடக்கும் அறிஞர்களை வழிபட்டு நடப்பதே உத்தம மாணாக்கர்களுக்கு உற்ற கடமையாகும்.

11. கல்விப் பொருளை அடையப்பெற்ற கவிஞரது நல்வரவை எவரும் ஆவலுடன் எதிர்நோக்குவர்;

ஆதலால், கல்விப் பொருளே கைகண்ட பொருள் என்பது தேற்றமாம்.

12. கல்வியறிவு இல்லாத அறிவீனர்களது கூட்டத்தில் ஒருவன் எக்காலத்தும் சேரலாகாது; சேரின், அவன் பழிக்கும் பாவத்திற்கும் ஆளாவான்.

13. கல்வி, ஒருவனைப் பொய் களவு பொறாமை முதலிய புன்மைத் தன்மைகள் சேராமல் காத்தலால், அவனுக்குக் கல்வியினும் சிறந்த துணை வேறொன்றும் உண்டோ?

14. சூரியன் புறவிருளைமட்டும் போக்கவல்லது; வித்தியாசூரியனோ அகவிருளைப் போக்கும் ஆற்றலை உடையது. அதனால் சூரியன், சந்திரன், அக்கினி என்னும் முச்சுடர்களினும் கல்வியே களங்கமற்ற நற்சுடராகும்.

15. கல்வியால் ஒழுக்கமும், ஒழுக்கத்தினால் யோக்கியதையும், யோக்கியதையால் பொருளும், பொருளால் அறமும், அறத்தால் வீடும் கிடைக்கும். அதனால் இம்மைப் பயனுக்கும் மறுமைப் பயனுக்கும் கல்வியே சிறந்த கருவியாகும்.

> 'அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
> புறங்கடை நல்லிசையும் நாட்டும் — உறுங்கவலொன்
> றுற்றுழியுங் கைகொடுக்கும் கல்வியி னூங்கில்லை
> சிற்றுயிர்க் குற்ற துணை'

என்பது மேற்கோளாகும்.

16. கல்வி, தொடங்குங்கால் துன்பந் தருவதாகத் தோன்றும்; பின்பு, அது மடமையைக் கொன்று, அறிவைப் பெருக்கி, இன்பம் பயக்கும்; உழுநிலம்

வேளாளனுக்கு முதலில் உழைப்பைத் தந்து, பிறகு பிழைப்பைத் தருதல் உண்மை யன்றோ?

17. மாந்தர் தமக்கு அழகு செய்யப் பலவகைப்பட்ட ஆபரணங்களை அணிந்துகொள்ளுவர்; கல்வியாகிய அழகினையுடைய ஒருவனுக்கு அவ்வணிகள் என்ன பயனைச் செய்யும்?

'சடத்துக் கழகேன்பர் தான்கற்ற கல்வி தகுமதல்லால்
இடத்தக்க பூடணந் தானணி யாவிடில் ஏசுவரோ
புடத்துட் படத்தங்கக் கட்டி யுருக்கிப் புதுக்கியபோற்
குடத்துக்குப் போட்டழ கேனச்சு தாநந்த கோவிந்தனே'

என்னும் செய்யுளைக் காண்க.

18. *கல்விப் பொருளுக்கும் செல்வப் பொருளுக்கும் நெடுவாசி பேதமுண்டு. எங்ஙனே யெனின், செல்வம் அள்ள அள்ளக் குறைவுறும், கல்வி அதனைச் சொல்லச்செல்ல நிறைவுறும்; செல்வம் கள்வரால் அபகரிக்கப்படும், கல்வி அவ்வாறாகாது கற்றோரால் உபகரிக்கப்படும்; செல்வம் துன்பத்தைக் கொடுக்கும், கல்வி அத் துன்பத்தைக் கெடுத்து இன்பத்தை மடுக்கும்; செல்வம் எரியில் வெந்துபோம், கல்வி தீமுதலியவற்றால் அழிவுறாது; செல்வம் வெள்ளத்தில் அடிபடும், கல்வி கற்றோர்தம் உள்ளத்தில் குடிபடும்; செல்வம் அபாயத்துள் மடுக்கும், கல்வி அவ்வபாயத்தைத் தடுக்கும் உபாயத்தைக் கொடுக்கும்; செல்வம் பகையை உண்டாக்கும், கல்வி அப்பகையினைப் போக்கும்; செல்வம் நிலத்திற் புதைக்கப்படும், கல்வி மனத்திற் பதிக்கப்படும்; செல்வம் நாளுநாளும் உருமாயும், கல்வி நாளுநாளும் உருவேயும்; செல்வம் தாயாதிகளாற் பாகித்துக்

* பர்த்ருஹரி.

கொள்ளப்படும், கல்வி அங்ஙனம் கொள்ளப்படாது; செல்வம் இவ்வுலகத்தே அழிவுறும், கல்வி அவ்வாறு அழிவுறாது தன்னை யுடையவர்க்கு இந்நிலத்தில் எல்லா நலனும் அளித்து, செல்லும் உலகத்தும் உடன்சென்று அவரை நற்கதியில் உய்க்கும்; பலவாறு உரைத்தல் என்? கல்வி அன்னைபோல் ரக்ஷிக்கும், தந்தைபோற் சிக்ஷிக்கும்; மற்றும் எதைத்தான் அது செய்யாது!'

## 3. விடாமுயற்சி

இந்த உலகத்தில் வாழும் எல்லா வுயிர்களுக்கும் வேண்டிய எல்லாப் பொருள்களும் எல்லாம் வல்ல இறைவனால் படைக்கப்பட்டு நிறைந்துள்ளன. ஆயி-னும், ஒருவன் ஏதேனும் ஒரு பொருளைப் பெற விரும்-புவானானால், அவன் அதை முயற்சியின்றிப் பெறுதல் முடியாத காரியமே. முயற்சியுடைமை என்னும் அருங்குணம் மனிதன் ஒருவனுக்கு மாத்திரமேயன்று, மற்றெல்லா வுயிர்களுக்கும் இன்றியமையாத தாகும். எறும்பு, தேனீ முதலிய சிற்றுயிர்களும், ஒரு சிறிதும் சோம்பலின்றி, அன்றாடம் உடல்வருந்தி உழைப்பது அனைவரும் அறிந்ததோர் உண்மையே யன்றோ?

2. மனிதனோ எல்லாவுயிர்களினும் மாண்புவாய்-ந்தவன்; ஐயறிவோடு பகுத்தறிவும் அமையப் பெற்-றவன்; சகல ஜீவராசிகளும் தனக்கு அடங்கி, தன் நலத்தின்பொருட்டு உழைத்து, ஊழியஞ்செய்யக் கட-மைப்பட்டவை என்று எண்ணும் இறுமாப்பு உடை-யவன். இத்தகைய மானிடன் ஒரு சிறிதும் முயற்சி-யின்றிச் சோம்பி யிருப்பானாயின், அவன் பிறப்பினால் நாயினும் கடைப்பட்டவன் என்பதில் என்ன தடை!

3. ஒருவன் திரண்ட செல்வமுடைய சீமானாயினும், எதும் முயற்சியின்றி இருப்பானாயின், அவன் தான்பெற்ற செல்வத்தினால் அடைய வேண்டிய பெரும்பயனை ஒரு சிறிதும் அடையவே மாட்டான். ஒருவன் எவ்வளவு வறியனாயினும், தன் கடமையைச் சோம்பலின்றிச் செய்வானாயின், அவன் சகல சவுக்கியங்களையும் எளிதில் அடைவான். முயற்சியுடைய ஒருவனுக்கு அசாத்தியமான காரியம் எதும் இராது. 'அசாத்தியம் என்பது சோம்பேறிகளின் வார்த்தை' என்று சுத்தவீரனாக விளங்கிய நெப்போலியன் அடிக்கடி சொல்வது வழக்கமாம்.

4. விடாமுயற்சியை மேற்கொண்ட ஒருவன் எந்தக் காரியத்திலும் வெற்றியுறுவது திண்ணம். ஒருவன் பெரிதும் முயன்று, ஒரு காரியத்தைச் செய்து முடிப்பானாயின், அது பகீரதப் பிரயத்தனமாக முடிந்தது என்று கூறுவது உலக வழக்கு. பகீரதன் யார்? அவன் செய்த பிரயத்தனம் யாது? அதன் முடிவு என்ன? என்பவற்றை விளக்கும் வரலாற்றை இங்கே கூறுவோம் :

## பகீரதப் பிரயத்தனம்

5. சூரிய குலத்தில் தோன்றிய சகரன் என்னும் அரசன் இந்திர பதவியைப் பெறவிரும்பி அசுவமேதம் என்னும் அரிய வேள்வியைச் செய்ய ஆரம்பித்தான். அதைக் கண்ட இந்திரன், தன் ஒற்றரை நோக்கி, அக் குதிரையைக் கொண்டுபோய் மறைத்து வைக்கும்படி கூறினான். அவர்கள் அதைப் பாதாள லோகத்திற் கொண்டு போய், அங்கே தவம் செய்துகொண்டிருந்த கபிலமுனிவர் அருகில் கட்டிவைத்து வந்துவிட்டனர்.

யாகபசுவைக் காணுமையால், சகரன் தன் மைந்தர் அறுபதினுயிரம்பேரையும் அழைத்து, அதைத் தேடும்படி அனுப்பினுன். அவர்கள் பல்வேறு இடங்களிலுஞ் சென்று தேடி, முடிவில், அது பாதலத்தில் கபிலமுனிவர் பக்கலில் கட்டுண்டிருத்தலைக் கண்டனர். கண்டதும், தம் குதிரையைக் கொண்டுபோனவர் அம்முனிவரே என்று கருதி, அவர்கள் அவரை எதிர்த்தனர். அம்முனிவர் முனிவு கொண்டு, அவர்களை நோக்கினர்; உடனே சகரபுத்திரர் அனைவரும் கபிலரது கோபாக்கினியால் எரிந்து சாம்ப லாயினர். இந்தக் கேட்டை யுணர்ந்த சகரன் புத்திரசோகத்தால் பெரிதும் வருந்தி இறுதியில் மரணமடைந்தான்.

6. பின்பு, சகரன் மரபில் பகீரதன் என்னும் உத்தம புத்திரன் ஒருவன் தோன்றினுன். அவன் தன் முன்னேர் பாதாள லோகத்தில் இறந்து சாம்பராய்க் கிடக்கின்றனர் என்னும் உண்மையை உணர்ந்து, பெரிதும் இரங்கினுன். பின்பு, அவன் தன் அரசாட்சியை அமைச்சர் வசத்தில் ஒப்பித்துவிட்டு, காட்டையடைந்து, பிரமனை நோக்கிக் கடுந்தவம் புரிவானுனன். பிரமன் அவனது தவத்திற்கு இரங்கி, அவன்முன் தோன்றி, 'அன்ப, நீ வேண்டுவது யாது?' என்று வினவ, பகீரதன், 'ஐயனே, என் மூதாதையர் பாதலத்தில் சாம்பராய்க் கிடக்கின்றனர்; அவர்கள் நற்கதி அடையுமாறு அருள் புரிதல் வேண்டும்' என்று வேண்டிநின்றுன். அதன்மேல் நான்முகன், 'ஆகாய கங்கையைக் கொண்டுபோய், அந்த அஸ்திகளை நனைத்தால், அவர்கள் பரிசுத்தராய் நற்கதி யடைவார்கள்; கங்கையை யான் இவ் வுலகில் அனுப்பத் தடையில்லை, அக் கங்கையின் வேகத்தைத் தாங்கவல்லவர் இவ்-

வுலகில் எவரும் இலர். பரமசிவன் ஒருவரே அதன் வேகத்தைப் பரிக்க வல்லவர்! அதனால் நீ அவரை நோக்கி வரங்கிடப்பாய்' என்று கூறி மறைந்தனன்.

7. பின்பு, பகீரதன் பரமசிவனைக் குறித்து வரங் கிடந்தான். பரமசிவன் அவன்முன் தோன்றி, 'அன்ப, நீ வேண்டுவது யாது?' எனலும், பகீரதன் தன் விருப்பத்தை வெளியிட்டு, அருள்புரியுமாறு வேண்டினன். ஈசுவரனும், 'நின் எண்ணம் ஈடேறும்' என்று அருளிச் செய்து மறைந்தனர்.

8. அதன்பின் பகீரதன், கங்கையை வேண்டித் தவம் புரிந்தான். கங்கை, 'நம்மைத் தாங்குவோரும் இவ் வுலகில் உளரோ!' என்னும் செருக்குடன் அதி வேகமாக விண்ணினின்றும் இழிந்தது. அதன் கருவத்தைக் கண்ட கடவுள் அதனைத் தம் சடைக்காட்டில் தாங்கவே, அதன் பிரவாகம் அனைத்தும் அடங்கி, ஒரு துளியேயாய் ஒடுங்கிவிட்டது. கண்டான் பகீரதன், 'அந்தோ, கங்கை பொங்கிவருமென்று கருதினேமே! அதன் வேகமெல்லாம் மங்கிவிட்டதே! இனி என்ன செய்வது!' என்று கலங்கி, பின்னும் அக் கங்காதரனைக் கைகூப்பித் தொழுது வேண்டினன். பெருமான் பெரிதும் இரங்கி, அக் கங்கையை இமயமலையின் சாரலில் கவிழ்த்தனர். கவிழ்த்தலும், கங்கை கால்கொண்டு ஓடிச்செல்லும் வேகத்தினால் சன்னு முனிவரது ஆச்சிரமத்தை பின்னப்படுத்திற்று. படுத்தவே, அம்முனிவர் கங்கையை முனிந்து, அதைத் தம் அங்கையிற் கொண்டு ஆபோசனஞ் செய்துவிட்டனர்.

9. பகீரதன் மனம் பகீரென்று பற்றி யெரிந்தது. 'கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமற் போயிற்றே!

கங்கையைப் பாதலம் வரையிற் கொண்டு வந்தும் பயன்படாமற் போயிற்றே! இனி என்ன செய்வது? முனிவர் காலில் விழுந்து முறையிடுவதே முறை' என்று துணிந்து, அம்முனிவரிடம் தன் குறைகளைக் கூறி முறையிட்டான் பகீரதன். முனிவர் பகீரதனுக்குற்ற இடுக்கண்களை உணர்ந்து, பரிவு கூர்ந்து, தாம் உண்ட கங்கையைத் தம் செவியின் வழியே செலவிடுத்தனர். அதனால் கங்கை சான்னவி என்னும் பெயர் பெற்றுச் சென்றனள்.

10. பகீரதன் அந்தக் கங்கையைப் பணிவுடன் அழைத்துச் சென்று, கபிலமுனிவர் ஆச்சிரமத்தை அடைந்து, அவரது அனுமதியைப்பெற்றுக்கொண்டு, தன் முன்னோர் எரிந்துபட்டதனாலான சாம்பரின் மேல்பாயச் செய்தனன். கங்கையும் அவ்வாறேசென்று சாம்பரை நனைத்தனள். உடனே சகரபுத்திரர் அனைவரும் பரிசுத்தராய், துறக்கத்தை யடைந்தனர். பகீரதன் தன் விடாமுயற்சிக்கு ஏற்ற பலன் கிடைத்தமை கண்டு, கங்கையைப் பணிந்து விடைபெற்று, தன் நாட்டை யடைந்து, நலம்பெற வாழ்ந்திருந்தான்.

## 4. முத்துராமக் கவிராயர்

சுமார் ஐம்பது யாண்டுகளுக்கு முன்னர் சென்னைச் சிந்தாதிரிப்பேட்டையில் முத்துராமக் கவிராயர் என்பவர் ஒருவர் இருந்தனர். அவர் பாரதக் கதையை விருத்தங்களும் கீர்த்தனங்களும் விரவிவர நாடகமாகச் செய்தனர். பாரதக் கீர்த்தனைகள் நவரசமும் விளங்கப் பழமொழிகள் நிறைந்து படிப்போர்க்குப் பெரிதும் இன்பம் பயக்கும் பண்பு வாய்ந்தவை. இவ் வரிய

னூலை, அக்காலத்தே சிறந்த சீமானுத் திகழ்ந்த டம்பாசாரி அருணுசலமுதலியார் என்பவர் அப்புலவர்க்கு மிக்க பொருளுதவி செய்து ஆதரித்து வெளியிட்டனர் என்பது பலரும் அறிந்த விஷயம்.

2. முத்துராமக் கவிராயர் செந்தமிழ்ப் புலமையோடு செவ்விய குணங்களும் வாய்ந்தவர். அடுத்தோரை ஆதரிக்கும் அருங்குணம் படைத்தவர். அவரது பெருந்தகைமையை விளக்கவல்ல சரித்திரங்கள் பல இன்றும் வழங்குகின்றன. அவற்றுள் ஒன்றை இங்கே கூறுவோம்.

3. கவிராயரிடத்து வேலைக்காரன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் வாஞ்சையப்பன் என்பது. அவன் ஒரு நாள் சென்னையினின்றும் புறப்பட்டு, திருப்போரூர் என்னும் திவ்விய க்ஷேத்திரத்திற்குச் சென்று, அங்கு எழுந்தருளியுள்ள முருகக்கடவுளைத் தரிசித்துவிட்டுத் திரும்பிச் சென்னைக்கு வரும் வழியில் வாணியன் சத்திரம் என்னுமிடத்தில் தன் நண்பர் சிலருடன் தங்கியிருந்தனன். அவனுக்கு விரோதிகளான துட்டர் சிலர் அவனை அங்குச் சந்தித்து, வம்புக்கிழுத்து வாதாடிப் புடைக்க வந்தனர். வாஞ்சையப்பன் தன் நண்பர் சிலருடன் கூடி யிருந்தும், பகைவர் பலராக இருந்தமையின் அவருடன் போர்புரிய ஆற்றல் இல்லாதவனுகிப் பெரிதும் அஞ்சிக் கூச்சலிட்டு அரற்றினுன். அதைக் கேட்டு, அங்கிருந்த மாந்தர் சிலர் சேர்ந்து வந்தனர். வரவே, மாற்றலர் அஞ்சி ஒடி யொளித்தனர்.

4. வாஞ்சையப்பன், பின்பு, சென்னையை அடைந்து, வழியில் நிகழ்ந்த செய்திகளைக் கவிராயருக்குத் தெரிவித்தனன். அவர் அவன்பால் பெரிதும் இரக்க

முற்று, அக்காலத்துப் போலீஸ் அதிகாரியாயிருந்த முத்துசாமிப்பிள்ளை என்பவருக்குச் சீட்டுக்கவி ஒன்று தீட்டி அனுப்பினர். அச் செய்யுள் கீழ் வருமாறு :

சதிர்பெறுஞ் செந்தமிழ்க் கவிராஜ ராஜஇறை
　　தவஆதி புரிவடிடைத்
தாயடிமை யாம்முத்து ராமனெனும் மெய்ஞ்ஞான
　　ஜனகன்எழு துங்காகிதம்
தங்குவளை செங்கையான் பகிரதி குலத்தினன்
　　தஞ்சையான் செங்கோலினன்
தவமுற்ற அருளப்பன் அருள்புத்ர துரைமுத்து
　　சாமிஎதிர் கொண்டுகாண்க

அதிவிரைவி னிற்காகி தங்கொண்டு வருவாஞ்சை
　　யப்பனென் பவனென்றனை
அடுத்தவன் மேலுமிக நல்லவன் சன்மார்க்கன
　　ஐயஇவன் ஒரலுவலாய்
அன்பர்களு டன்திருப் போரூர் தனக்கேகி
　　அவணின்று வருபாதையில்
அவ்வூர்க் கிவன்போகு முன்போன சிலதுட்டர்
　　அணுகிவி ஞகஇவனை

எதிரிட்டு நேர்ந்தபடி வைதடித் தேகொல்ல
　　எண்ணமிட் டார்களிந்த
ஏழையுடன் வந்தவர்கள் ஐந்துபே ராம்தடியர்
　　ஈரெட்டு பேர்களதனல்
இவர்வெல்ல மாட்டாமல் வாணியன் சத்திரத்
　　தெதிர்நின்று கூச்சலிட்டார்
என்னென்று சிலர்கூடி ஞரதைக் காணவே
　　எதிரிகள் பதுங்கிவிட்டார்

பதிதர்க ளிருப்பதோ ராயபுரம் நீயிவன்
பங்கில்குல தெய்வமாகிப்
பரிவுடன் போலீசு கில்லிதுரை யொடுசொலிப்
பக்குவம தாய்ப்பிராது
பண்ணிவைத் துச்சாட்சி நன்றாய் விசாரித்துப்
பட்சபா தமிலாமல்அப்
பண்டருக் கேற்றதண் டனைசெயச் செய்வையேல்
பாரில்மிகு சீர்பெறுவையே.

இச்செய்யுளின் நலத்தையும் தெளிவையும் நயத்தை-யும் கண்டு வியந்து மகிழ்வுற்ற அப் பிள்ளையவர்கள் கவிராயர் விரும்பியபடியே தக்கவாறு விசாரித்து, அத் துட்டர்களைக் கண்டு பிடித்துத் தண்டனையடை-யச் செய்தனர் என்ப.

## 5. ஆகாயம் நீலமாயிருப்பதேன் ?

உலகத்திலுள்ளோர் அனைவரும் ஆகாயத்தில் மிகவும் பளபளப்பான மாசற்ற நீலநிறத்தைக் கண்டு வியந்து-கொண்டிருக்கின்றனர். ஆயினும், எவரேனும் எப்பொழுதேனும் சிறிதுநேரம் நிதானித்து இவ் விஷயத்-தைப்பற்றி ஆலோசித்து, 'ஆகாயம் நீலமாயிருப்பது ஏன்?' என்று சிந்தித்துப் பார்த்ததுண்டா? ஆய்ந்து பார்த்தால் இதன் காரணம் மிகவும் சுலபமானதாகவே காணும்; ஆயினும், அதைத் தெரிந்துகொள்ள முயல்-வதற்கு முன்னே ஒளியின் இயற்கையைப்பற்றி நாம் சிறிது தெரிந்துகொள்வது அவசியமானதாகும்.

2. முதலில், உலகத்திலுள்ள ஒளிகளெல்லாம் முக்கியமாய்ச் சூரியனிடத்தினின்றே உண்டாகின்றன என்பது அனைவர்க்கும் தெரியும். அதன்மேல் அறிந்து

கொள்ளவேண்டுவது என்னவெனில், சூரியனுக்கும் நமக்கும் நடுவிலிருக்கும் பல்லாயிரங் காதவழியைக்கடந்துகொண்டு அந்த ஒளி நம்மிடத்திற்கு எப்படி வருகிறது என்பதை அறியவேண்டும். மிகக் கற்றறிந்த பண்டிதராகிய நியூடன் சொல்வதாவது: சூரியன் ஏதோ ஒருவகைப் பொருளின் நுண்ணிய அணுக்களை ஆகாயத்தின் வழியாய் நம்மிடத்திற்கு எறிகிறான்; அந்தப் பொருள் நம்மண்டை வந்து நமது கண்களுள் ஊடுருவிச் செல்லுகின்றது; அதனாலேதான் ஒளி உண்டாகிறது என்பதாம். அவ்விஷயம் அவ்வளவு உண்மையா யிருக்குமென்று தோன்றவில்லை; ஏனெனில், இந்த ஒளியொன்றுதவிர மற்றெந்தக் கெட்டிப்பொருளாவது கண்ணாடிக்குள் ஊடுருவிச்செல்லக் கண்டிருக்கிறோமா? மேலும் இந்த ஒளியே, கண்ணாடியைவிட வெகு மெதுவானதாயும் ஊடுருவிச் செல்ல வெகு சுலபமானதாயும் இராகின்ற ஒரு கறுப்புத்துணியைக் கடந்து செல்லமாட்டாது என்பது நமக்கு நன்றாய்த் தெரியுமே. இந்த ஒளியின் விஷயத்தைப்பற்றியே ஆலோசனை செய்துகொண்டிருந்த பலர் இப்பொழுது, சூரியனுக்கும் நமக்கும் இருக்கிற இடைவெளியில் வெகு லேசாய்க் கண்ணுக்குத் தெரியாத ஈதர் (Ether) என்று சொல்லப்பட்ட ஒரு பொருள் வியாபித்திருக்கிறதென்றும், சமுத்திரத்தில் அலை யலைத்துக்கொண்டு ஓரிடத்தினின்றும் மற்றோரிடத்திற்கு ஓடுவதுபோல, ஒளியும் அந்த ஈதரின் மூலமாய் நாற்புறமும் பரவுகிறதென்றும் கூறுகிறார்கள். ஆயினும், நீரலைக்கும் ஒளியலைக்கும் சிறிது வேற்றுமையுண்டு. நீரலை ஒரு நிமிஷத்திற்குக் கால்மைல்தூரம் ஓடுமானால், அதே காலத்தில் ஒளியலை கோடி மைலுக்கு அதிகமாகவே ஓடும்.

3. ஒரு தண்ணீர்ப்பாத்திரத்தில் கையைவைத்து முன்னும் பின்னும் அலட்டினால், சிறிது சிறிதாய்ப் பல அலைகள் உண்டாகிப் பாத்திரத்தின் ஓரங்களில் மோதுமென்பது தெரியுமே. நமது கையைப் போலச் சூரியனையும், தண்ணீரைப்போல ஈதரையும் வைத்துக்கொண்டால், ஒளியின் அலைகள் நீரலைக்கு ஒப்பாகவும், நமது கண்கள் அந்த அலைமோதுகிற பாத்திரத்தின் விளிம்புக்கு ஒப்பாகவும் ஆகும். இப்படிச் சூரியன் அசைவதனால் பல சிற்றலைகள் உண்டாகின்றன: அவைதாம் ஒளியலைகள். அவை ஈதரின் மூலமாய்ச் சூரியனிடத்தினின்றும் நாற்புறமும் பரவுகின்றன

4. பெரும்புயல் அடித்துவிட்டபிறகு சமுத்திரத்தில் அலைகள் மலை மலையாய்ப் பெருத்து எழும்பிவரக் கண்டிருக்கிற நாம், வேளைக்குத் தக்கபடி ஒளியலைகள் பலவிதமாயிருக்கக்கண்டு அதிசயிக்க வேண்டுவதில்லை. பெருத்த நீரலைகள் கடற்கரையில் பலமாய் மோதுவது போலவே பெருத்த ஒளியலையும் அதிக வேகமாய் நமது கண்களில் வந்து மோதி அந்த ஒளிக்கு இருப்பிடமானபொருளை அதிக பளபளப்பாய் விளங்கச் செய்கின்றது.

5. புயலுக்குப் பிறகு மோதுகிற பெரிய அலையொன்றுமாத்திரமே யன்றி, ஒளிக்காகக் கடற்கரையிற் காணவேண்டிய திருஷ்டாந்தம் வேறொன்றும் உண்டு. பலவித வேளைகளில் அலைகள் ஒன்றுக்கொன்று பலவிதமான தூரமுடையதாயிருக்கக் கண்டிருக்கிறோமல்லவா? அப்படியே சிறந்த பண்டிதர்கள் ஒளியின் அலைகளைப் பரிசோதித்ததில், அவற்றுள் சில அலைகள் மற்றவைகளைவிட ஒன்றுக்கொன்று இரட்டிப்பான தூரத்தில் இருப்பதாகக் கண்டிருக்கிறார்கள்.

ஒளியைப்பற்றிய மிகவும் நுட்பமான விஷயம் இது-வேயாம்; அந்தந்த ஒளியலைகளுக்கு நடுவில் இருக்கிற தூரத்தினாலேதான் ஒளிக்கு நிறம் ஏற்படுகிறது. ஆகை-யால், அந்தத் தூரத்தின் அளவைக் கண்டுகொண்டால் இன்ன ஒளி இன்ன நிறமுடையது என்றும், இன்ன ஒளி இன்ன நிறம் என்றுந் தெரிந்துகொண்டால், அதைக்கொண்டு இன்ன அலை இன்ன அலையைவிட இவ்வளவு தூரத்தில் இருக்கிறதென்றும் சுலபமாய்த் தெரிந்துகொள்ளலாம்

6. ஒளியலைகள் வந்து நமது கண்களில் மோதும் போது, எல்லாவற்றிற்கும் கடைசியாக வெகு தூரத்-திலிருக்கிற அலைகள் சிவப்பு நிறமாகவும், அதை அடுத்த அலைகள் கிச்சிலிப்பழ நிறமாகவும், அதன் பின் அலை மஞ்சள்நிறமாகவும், பிறகு பசுமை நிற-மாகவும், அப்புறம் கறுப்பாகவும், பிறகு நீலமாகவும், கடைசியானது ஊதா நிறமாகவும் தோன்றும். இப்-படியாக ஒளியலைகள் நீரலைகளுக்கு ஒப்பாகவே இருக்-கின்றன; நீரலையின் உயரத்திற்கு ஒளியலையின் பள-பளப்பும் அதன் தூரத்திற்கு இதன் நிறமும் சரியா-கின்றன.

7. இப்போது நிறமுள்ள ஒளி இப்படிப்பட்டது என்று தெரிந்தது. ஒளிக்கு வெளுப்பு நிறமாவது என்ன என்று இனி விசாரிக்கவேண்டும். ஒரு திருஷ்-டாந்தம் பாருங்கள்: வட்டமான ஒரு தடித்த கடி-தத்தை யெடுத்து அதில் நேருக்கு நேராகச் சமதூரத்-தில் நான்கு கோடு இழுத்து, மையத்தில் ஒரு துளை செய்தால், அந்தத் துண்டுக் கடிதம் எட்டுப்பாகமாகப் பிரிக்கப்படுகிறது. அவ்வெட்டினுள் ஒன்றில் சிவப்பு

நிறமும், அதையடுத்த இரண்டில் மஞ்சள் நிறமும், அதையடுத்த கட்டத்தில் கிச்சிலிப்பழநிறமும், அதன் பக்கத்துக் கட்டத்தில் பசுமை நிறமும், ஆறுங்கட்டத்தில் கறுப்பும், ஏழாங்கட்டத்தில் நீலமும், எட்டாங் கட்டத்தில் ஊதாவுமாக நிறங்கொடுத்து, பிறகு அந்தத் துண்டுக் கடிதத்தைக் காற்றாடிபோலக் கட்டி, வெகு வேகமாய் ஆடச்செய்தால், அப்போது அந்தக் கடிதம் முழுதும் வெளுப்பாகவே தோன்றும். இதை அநேகர் நேராகப் பார்த்தும் இருக்கலாம். அதிலுள்ள வர்ணங்களெல்லாம் சுத்தமான வர்ணங்களல்ல. ஆகையால், அந்த வெண்மைநிறம் சுத்தமான வெளுப்பாயிராமல் சாம்பல்நிறமா யிருக்கும். இந்தப் பலவித வர்ணங்களையும் சேர்ப்பதனால் வெண்மைநிறம் ஆகிறதென்று இதனால் தெரியவருகிறது. ஆனால், வெண்மை நிறத்தில் இத்தனை வர்ணமும் கலந்திருக்க வேண்டுமல்லவா ?

8 நியூடன் என்பவர்தான் முதல்முதல் இதைக் கண்டுபிடித்து விளக்கிக் காட்டினவர். வெளுப்பு நிறமாகிய சூரியனுடையகாந்தியை ப்ரிஸம் (Prism) என்று வழங்குகிற முச்சவுக்கக்கண்ணாடியின் வழியாய்ப் புகச்செய்தால், அதினின்றும் வெளிவருகிற காந்தி வெளுப்பா யிருப்பதில்லை. சிவப்பு, மஞ்சள், பச்சை, நீலம் முதலான நிறங்களாக மாறுகின்றன. அந்த ஒளி ஒரு கடிதத்தில் விழும்படி செய்தால், அதில் கீழே சொன்ன வரிசையாகவே சிவப்பு முதலிய நிறங்கள் அமையக் காணலாம். இந்த வரிசையும் கீழே சொல்லியபடி ஒளியலைகளுக்கு ஒன்றுக்கொன்றுள்ள தூரத்தின் வேறுபாட்டாலேதான் உண்டானது. இந்தப் பலவர்ணங்களும் இப்படித் தோன்று-

வதற்கு அந்த முச்சவுக்கக் கண்ணாடிசெய்கிற காரியம் என்னவெனில், வெண்மை நிறமாக மாறுகிற பல நிறமுள்ள சூரிய கிரணங்களைத் தனித்தனி தன்னிடத்திற்கு இழுத்துக் கொள்கின்றது. ஆயினும், எல்லாக் கிரணங்களையும் ஓரளவாக இழுத்துக்கொள்வதில்லை. சிவப்புக் கிரணங்கள் மிகவுய பெரியவைகளாதலால் சுலபமாய் வணங்கிவரமாட்டா: மிகவும் சிறியவைகளான ஊதாக் கிரணங்களோ கொடிபோல வெகு லேசாய் வணங்குகின்றன.

9. இவைகளுக்கும ஆகாயத்திலுள்ள நீலநிறத்திற்கும் சம்பந்தம் என்னவென்று இப்போது விசாரிபபோம். வெளுப்பான சூரியகாந்தி இப்பூமியைச் சூழ்ந்திருக்கும் வாயுமண்டலத்தில் வரும்போது, ப்ரிஸிம் என்னும் கண்ணாடி செய்வது போலவே செய்பவல்ல எதோ ஒரு பொருளோடு சேர்கின்றது. அப்போது பலவிதமான சூரியகிரணங்களும் அதனால் வணக்கி யிழுக்கப்பட்டு வெவ்வேறாகப் பிரிக்கப்படுகின்றன. கறுப்பு, நீலம், ஊதா இந்தக் கிரணங்கள் அதிகமாய் வணக்கப்பட்டு, அவற்றுள் சில மறுபடியும் சூரியனிடத்திற்குத் திரும்பிச் செல்லும்படி செய்யப்படுகின்றன. மிகுந்த பச்சை, மஞ்சள், சிவப்பு இந்த நிறங்கள் மாத்திரமே நம்மிடத்திற்கு வருகின்றன. இவையெல்லாம் சேர்ந்து மங்கலான மஞ்சள்நிறம், ஆகின்றன. மூடுபனி முதலியவைகளால் ஆகாயம் நன்றாய்க் கனத்திருக்கையில், இந்தப் பச்சை, மஞ்சள் நிறங்கள்கூடச் சூரியனிடத்திற்குத் திருப்பப்பட்டு கிச்சிலிப்பழ நிறமும் சிவப்புநிறமுமே நம்மிடத்திற்கு வருகின்றன. அதனாலேதான் அக்காலத்தில் சூரியன் மிக்க சிவப்பாய்த் தோன்றுகின்றது. காலை மாலை

களிலுங்கூட இதேவிதமாகவே ஆகின்றது. அக்காலங்களில் சூரியகிரணங்கள் மிகவும் சாய்வாக வாயுமண்டலத்தின் நடுவே வெகுதூரம் வரவேண்டி யிருப்பதனுல், பனிமூடிய ஆகாயத்தின் வழியாய்ச் சிறிது தூரம் வருவதனுல் உண்டாகிற காரியமே உண்டாகின்றது; அதாவது, சிவப்புக் கிரணங்கள் மாத்திரமே நம்மிடத்திற்கு வந்து சூரியனைச் சிவப்பாய்க் காட்டுகின்றன.

10. திரும்பிப் போன ஊதா, நீலம், கறுப்பு ஆகிய இந்தக் கிரணங்கள் என்ன ஆயினவோ அதை இப்போது விசாரிக்கவேண்டும். அவை, ஆகாயத்தில் நாற்புறமும் பரவுகின்றன. சந்திரனிடத்திற்கும் மற்றக் கிரகங்களிடத்திற்கும் போகிற காந்தியினின்றும் நீல கிரணங்களை யெல்லாம் நம்முடைய வாயுமண்டலம் இழுத்துக்கொள்கின்றது. அதனுலேதான் ஆகாயம் நீலமாகவும் அந்தக் கிரகங்களுடைய கிரணங்களெல்லாம் சிவப்பும மஞ்சளுயாகவும் தோன்றுகின்றன.

11 இப்படிச் சூரியகிரணங்கள் சிவப்பும் நீலமுமான நிறங்களாக நம்முடைய வாயுமண்டலத்தால் பிரிக்கப்படுகின்றன. சிவப்புக் காந்தி நேராய் நம்முடைய கண்களண்டைவந்து சேருகின்றது; நீலநிறம் நாற்புறமும் பரவிப் போகின்றது. அதனுல், நாம் சிவப்புக் காந்தியை மாத்திரம் பெற்றுக்கொண்டு நீலக் காந்தியை இழந்துபோகிறேம். ஆயினும, சந்திரனிடத்திற்கும் கிரகங்களிடத்திற்கும் போகிற காந்தியினின்றும் நீலநிறமானது நமது வாயுமண்டலத்தால் கவரப்பட்டு ஆகாயத்தில் நமக்கு நன்றுய்ப் புலப்படுகின்றது.

12. ஆகாயம் நீலமாயிருப்பது இதனாலென்பது இப்போது நன்றாய்த் தெரிந்ததல்லவா? இன்னும் சற்று நிதானித்துப் பார்த்தால், இன்னொரு விஷயமும் தெரியும். ஒவ்வொரு காலத்தில் சூரியன் அதிக சிவப்பாகத் தோன்றுகிறதே, அக்காலங்களில் பச்சைக்கிரணங்கள்கூட நம்மிடத்திற்கு வாராமல் திரும்பிப் போய்விடுவதனாலேதான் அப்படியாகின்றது. அதனால் அக்காலங்களில் ஆகாயம் சுத்த நீலமாகத் தோன்றக் கூடாது. பசுமை கலந்த நீலமாகவே தோன்றவேண்டும். சூரியன் அதிக சிவப்பாய்த் தோன்றுகிற மாலை வேளைகளில் பார்த்தால் ஆகாயம் அப்படியே தோன்றக் காணலாம்.

## 6. திரவியம் என்பதென்ன?

திரவியம் எவ்வாறு உற்பத்தி செய்யப்படுகிறது என்பதும், உற்பத்தி செய்தவர்களுக்குள் அது எவ்வாறு பங்கிடப்படுகிறது என்பதும் விசாரிக்கிற நூல் அர்த்தசாஸ்திரம் எனப்படும். திரவியம் என்பது விற்கப்படும் பொருளாம்; விற்கப்படும் பொருளெல்லாம் உபயோக முடையவைகளா யிருக்கும். ஏனெனில் உபயோகமற்றதை எவரும் விலைகொடுத்து வாங்கார். நிலம், வீடு, தானியம், வஸ்திரம், தட்டுமுட்டுகள் முதலாகிய பொருள்களெல்லாம் உபயோக முடையவைக ளாதலால் விற்கப்படுகின்றன. விற்கப்படுவதால் திரவியம் என்று சொல்லப்படும். விற்கப்படும் பொருளெல்லாம் உபயோகமுடையவைகள் என்று சொன்னோம். ஒருபொருள் யாவருக்கும் உபயோகமா யிராது. படிக்காதமூடர்களுக்குப் புத்தகங்களால் யாதொரு பிரயோசனமும் இல்லை. ஆங்கிலர் தலையிற்

போடுகிற தொப்பியை இந்துக்களில் பலரும் வாங்க-மாட்டார்கள். காப்பிக்கொட்டையும் தேயிலையும் யாவருக்கும் உபயோகப்படமாட்டா. சன்னியாசி-களுக்கு இரத்தினங்களாலும், கண்ணிழந்தவர்களுக்கு வர்ணப்படங்களாலும் உபயோகம் இல்லை. ஆயினும் புத்தகம், தொப்பி, காப்பிக்கொட்டை, தேயிலை முத-லிய பொருள்களைத் திரவியமல்லவென்று சொல்வது பிசகு. சில ஜனங்களுக்குப் பிரயோசனமில்லாவிடி-னும், வேறு சில ஜனங்கள் அவைகளை வாங்குவார்கள். உபயோகப்படுந் தன்மை அவைகளிடத்தி லிருக்கின்-றது. ஆதலால், ஓரிடத்தி லில்லாவிடினும் வேறோரி-டத்திலாவது அவைகள் விலையாகும். விலைப்பண்டங்க ளெல்லாம் திரவியம் என்பது சித்தாந்தம்.

2. விலைப் பண்டம் எல்லாம் உபயோகப்படும் என்று முன்னமே சொன்னோம். ஆயினும், உபயோ-கமான எல்லாப் பொருளும் விலையாகமாட்டாது. காற்றும் வெளிச்சமும் யாவருக்கும் உபயோகமா-யிருந்தபோதிலும் அவைகளை விலைக்கு விற்பதில்லை. யாவருக்கும் பொதுவாயும், வருத்தமின்றி அகப்படக் கூடியதாயும் இருப்பதால் காற்றையாவது வெளிச்சத்-தையாவது விலைக்கு விற்பதுமில்லை, திரவியமென்று சொல்வதுமில்லை. தண்ணீரும் அப்படியே. சில இடங்களில் மாத்திரம் தண்ணீருக்கு விலையுண்டு.

3. முற்காலத்தில் ஜனங்கள் பொன், வெள்ளி, இவைகளை மாத்திரம் திரவியம் என்றும், மற்றப்பொரு ளெல்லாம் திரவியமல்ல என்றும் எண்ணி யிருந்-தார்கள். அன்னிய தேசங்களிலிருந்து வரும் பளிங்குச் சாமான்களுக்குப் பிரதியாய் நாம் பஞ்சு அல்லது நீலக் கட்டியை அனுப்புகிறோம். சில சமயங்களில் போது-

மான பஞ்சம் நீலக்கட்டியும் இல்லாவிடில், பொன் அல்லது வெள்ளிநாணயங்களை அனுப்புகிறோம். பொன் னுட வெள்ளியும் போய்விட்டபடியால் நம்முடைய தேயத்தில் திரவியம் குறைந்ததாக நினைக்கிறார்கள். நாணயங்கள் வெளித்தேசத்துக்குப் போனபோதிலும் அத்தேசங்களி லிருந்து செலவான நாணயத்துக்குச் சரியான கண்ணாடிச்சாமானகள் நமது தேசத்துக்கு வந்ததை யோசித்துப் பார்க்கிறதில்லை. ஏற்றுமதியான இப் பணம் இறக்குமதியான பளிங்குச் சாமானுக்கு உரிய விலை. பணத்துக்குப் பிரதியாகக் குளோப்புக்களும் பிறவும் உள்ளன. நாம் ஒன்றும் இழக்கவில்லை. அப்படியிருக்கப் பணம் ஒன்றே திரவியம் என்றும், பணமில்லாவிட்டால் திரவியமில்லையென்றும், பணம் அதிகமா யிருக்கிற தேசங்கள் மாத்திரம் திரவிய சம்பத்துடையவைக ளென்றும் சொல்வது முற்றும் தவறு. இந்தத் தப்பெண்ணம சாதாரண நடவடிக்கைகளிலும் காணலாம். நூறு ரூபாய் கொடுத்து மேஜை நாற்காலிகளும், சரிகைச்சோமனும் வாங்கினால, அந்த நூறு ரூபாயை இழந்துபோனதாகவே நினைககிறார்கள். பணததுசகுப் பதிலாக மேஜை, நாற்காலிகளும் சரிகைச்சோமனும் நமது வீட்டிலிருப்பதைச் சற்றேனும் யோசிப்பதில்லை. பணத்தை வீட்டுக்குக் கொண்டு வருகிற வியாபார மெல்லாம் நல்லதென்றும், பணத்தைக் கொடுத்துச் சாமானைக் கொள்ளுகிற தெல்லாம் நஷ்டமென்றும் பலர் எண்ணிவருகிறார்கள். இவர்கள் பணத்தின் உபயோகத்தை நன்றாய்க் கண்டறிந்தவர்கள் அலலர். நமக்குவேண்டிய பொருளை வாங்குவதற்கு ஓர் ஏதுவாயிருப்பதினாலேதான் பணத்தை நாம் யாவரும் விரும்புகிறோம். அந்தப் பணம் பொன அல்லது

வெள்ளியாயிருந்தாலும், நோட்டு அல்லது செக்கு ஆகிய காயிதத் துண்டாயிருந்தாலும் பிரயோஜனம் ஒன்றே. இந்தப் பிரயோஜனம் மற்றப் பொருளிலும் உண்டு. கடலைவியாபாரி கடலையை விற்றுத் தனக்கு வேண்டிய அரிசியும நெய்யும் வாங்குவான். சிலர் நெய்யைவிற்று வரகும் மிளகும் வாங்குவார்கள். சிலர் பாலை விற்றுக் கம்பு வாங்குவார்கள். இந்துதேசத்தவர்கள் பஞ்சு, நீலக்கட்டி, தோல், சர்க்கரை, இருப்புச்சன்னம் ஆகிய இவைகளைக் கொடுத்து, துணி, பளிங்குச்சாமான், காயிதம் முதலான பொருள்களை வாங்குகிறார்கள். பிரெஞ்சுதேசத்தார்கள் சாராயத்தையும் பழத்தையும் கொடுத்துச் சர்க்கரை, காப்பி, தேயிலை, புகையிலை, பஞ்சு முதலான பதார்த்தங்களை வாங்குகிறார்கள். இந்த வியாபாரங்களில பணமின்றி ஒரு பொருளை மற்றொரு பொருள்கொடுத்து வாங்குகிறார்கள். பணத்தின் பிரயோஜனமும் இதுதான். ஆகையால், பணத்தை மாத்திரம திரவியம் என்று சொல்லுவது பிசகு.

4. இந்துக்கள் திரவியத்தை ஐந்து வகையாகப் பிரித்திருக்கிறார்கள். (1) மலைபடு திரவியம் : மலையில் உண்டாகிற பொருள்கள்—மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமம் முதலியன. (2) காடுபடு திரவியம் : காட்டில் உண்டாகும் பொருள்கள்—தேன்கூடு, தேன், அரக்கு, மயிற்பீலி, நாவி முதலியன. (3) நாடுபடு திரவியம்: நாட்டில் உண்டாகும் பொருள்கள் — செந்நெல், சிறுபயறு, கரும்பு, வாழை, செவ்விளநீர் முதலியன. (4) நகர்படுதிரவியம் : பட்டணத்திலுண்டாகும் பொருள்கள் — அரசன், பித்தன், கருங்குரங்கு, யானை, கண்ணாடி முதலியன. (5) கடல்படு-

திரவியம்: கடலில் உண்டாகும் பொருள்கள் — உப்பு, முத்து, பவளம், சங்கு முதலியன.

5. மேற்சொல்லிய பொருளெல்லாம் அர்த்த-சாத்திர முறைப்படி திரவியம் ஆகா. அரசன் விலைப்-பண்டம் அல்ல. ஆகையால், அரசனைத் திரவியம் என்று சொல்வது கூடாது. சில தேசங்களில் ஆட்-களை விலைக்கு விற்பதுண்டு; அவ்விடங்களில் அவர்-களைத் திரவியமென்று சொல்லலாம். நாகரிகமுடைய தேசங்களில் ஆட்களை விற்கிற வழக்கமில்லாமையால் அவர்களைத் திரவியமென்று சொல்லுவதில்லை. மேற் கூறிய திரவியவகுப்பில் அநேக பொருள்கள் விடப்-பட்டிருக்கின்றன. பஞ்சு, மரம், துணி, ஆட்டுமயிர் முதலிய கணக்கில்லாத பொருள்களும திரவியங்களே.

## 7. தொத்து நோய்களும் ஒட்டு நோய்களும்

அநேகருக்குத் தம்மை யறியாமலே வியாதிகள் கண்டுவிடுகின்றன. வியாதி ஒருவரிடமிருந்து மற்ற-வர்களுக்கு அநேக விதமாய்ப் பரவக்கூடும். ஒருவரை யொருவர் தொடுவதாலும், ஒருவர் தேகம் மற்றவர்கள் தேகத்தில் படுவதாலும் அநேக வியாதிகள் பரவுகின்-றன. அவற்றிற்கு ஒட்டு நோய்கள் எனப் பெயர். ஒருவரை யொருவர் தொடாம லிருக்கும் போதே நோயாளிகள் இருக்குமிடத்தில் உள்ள மற்றவர்களுக்கு வியாதிகள் தொத்திக் கொள்கின்றன. அவற்றிற்குத் தொத்து நோய்கள் எனப் பெயர். அவ்வாறு வியா-திகள் உண்டாககூடிய காரணங்களை இங்கே சற்று விவரமாகக் கூறுவோம்.

2. தொத்து நோய்களும், ஒட்டு நோய்களும் உண்டாவதற்குப் பெரும்பான்மையாய்க் கண்ணுக்குப் புலப்படாத கிருமிகளும், வேறு சில சிறு பிராணிகளுமே காரணம். சிலகிருமிகள் அதிசீக்கிரத்தில் பரவிப் பலருக்கு வியாதியை யுண்டாக்குவதனால் கொள்ளை நோய் உண்டாகின்றது. அதற்குத் திருட்டாந்தம் — பெரியம்மை, வாந்திபேதி முதலியவைகள். கிருமிகள் அநேக விதங்களாக நம் தேகத்தில் புகுந்து விருத்தியாகின்றன. நாம் ஆரோக்கியமாகவும் பலமாகவும் இருந்தால் அக்கிருமிகள் விருத்தியாக முடியாமல் செத்துப் போகின்றன. ஆனால், சிலர் ஆரோக்கியமாயிருந்தபோதிலும் அவர்கள் உடம்பில் புகுந்து விருத்தியான கிருமிகள் அநேகமாயிருந்தால், அவர்களுக்கு நிச்சயமாய் வியாதி உண்டாகின்றது. ஆரோக்கியத்தை யிழந்தவர்கள் பலவீனர்கள். அவர்கள் உடலில் சிற்சில கிருமிகள் புகுந்தபோதிலும், அவை அதிசீக்கிரத்தில விருத்தியடைந்து, அவர்களுக்கு வியாதியை யுண்டாக்குகின்றன.

3. உடம்போடு உடம்பு படுவதால் கிருமிகள் ஒருவர் உடலிலிருந்து மற்றவர்கள் உடலில் தொத்திக்கொள்கின்றன, தொடுவதாலன்றி வேறு விதங்களாகவும் கிருமிகள் பரவமுடியுமோ என்பதை யோசிப்போம். சில கிருமிகள் காற்றின் மூலமாய்ப் பரவி அநேகர் உடலில் செல்லலாம். நோயாளி தொட்ட உணவில் கிருமிகளிருக்கலாம். அந்த உணவில் மிகுதியானதை மற்றவர்கள் உண்டால் அவர்கள் உடலிலும் அக் கிருமிகள் சேரும். நோயாளிகள் தேகத்தைக் கழுவிய ஜலத்திலும கிருமிகளிருக்கலாம். கிருமிகள் சேர்ந்த அந்த அசுத்த ஜலம் குடிக்கிற

ஜலத்தில் சேர்ந்துவிடலாம். அந்த ஜலத்தைக் குடிப்பவர்கள் உடலிலும் கிருமிகள் சேரும். நோயாளிகள் உடுத்திருக்கும் உடைகளிலும் கிருமிகள் இருக்கலாம். அவ் வுடைகளைச் சுத்திசெய்யாமல் பிறர் உபயோகித்தால் அவர்கள் உடம்பிலும் அக் கிருமிகள் சேரும்.

4. மேலே சொன்ன விஷயங்களால் எங்கெந்த இடங்களில் தொத்து நோய்களும், ஒட்டு நோய்களும் அதிகமாகக் காணப்படும் என்பதை நீங்கள் ஊகித்துக் கொள்ளலாம். இருள்நிறைந்த இடங்களிலும், காற்றோட்ட மில்லாத இடங்களிலும், ஜன நெருக்கமான இடங்களிலும் கிருமிகள் அதிகமாகக் காணப்படுகின்றன. அதைப் பார்க்கிலும் அதிகமான கிருமிகள் அசுத்தமான இடங்களிலும், குடிக்கும் ஜலம் அசுத்தப்பட்ட இடங்களிலும் காணப்படும். ஆகையால் அறிவீனத்தால் அநேகருக்கு வியாதிகள் உண்டாகும் என்பதில் சந்தேகமில்லை. சில வியாதிகளைப் பற்றி இங்கே தெரிவிப்போம்.

5. பெரியம்மை (Small-pox) :—அம்மை மிகக் கொடிய வியாதிகளிலொன்று. வருஷந்தோறும் அந்த வியாதியால் பல்லாயிரம் ஜனங்கள் மாள்கின்றனர். அந்த வியாதியிலிருந்து அநேகர் சௌக்கியமடைந்த போதிலும் அவர்கள் தேகத்தில் அநேக ஊனங்கள் ஏற்படுகின்றன. அதனால் கண்பார்வையை இழப்பவர்கள் அநேகர். பெரியம்மை அவ்வளவு கொடிய வியாதியான போதிலும், அதை எளிதில் தடுத்துக்கொள்ள முடியும். எப்படித் தடுத்துக்கொள்வதென்பதைப் பற்றிக் கீழே விவரமாய்த் தெரிவிப்போம்.

6. பெரியம்மைக் குரிய குறிகள் :— அந்த வியாதி வெளிப்படையாய்த் தெரிவதற்குமுன் தலைவலி, இடுப்புவலி, வாந்தி, காய்ச்சல் முதலியவை காணும். காய்ச்சல் கண்ட மூன்றாந் தினம் உடம்பில் தழும்புகள் (Rashes) உண்டாகும். அத் தழும்புகளிலிருந்து பருக்கள் கிளம்பி, அவை முத்துகள் என வழங்கும் பெரிய கொப்புளங்க ளாகின்றன.

7. பெரியம்மையைத் தடுக்கத்தக்க உபாயங்கள் :— பெரியம்மை உண்டானவுடனே, அவ்விடத்திலுள்ள அனைவரும் அம்மை குத்திக்கொள்ள வேண்டும். அம்மை குத்துவது என்றால் என்ன என்பதைச் சற்று விவரமாய் நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும். கிருமிகள் நம் தேகத்தில் சேர்ந்தால் நமக்கு வியாதி யுண்டாவதுபோலவே, அநேக பிராணிகளின் தேகத்திலும் அக்கிருமிகள் சேர்ந்தால் அப்பிராணிகளுக்கும் அவ்வியாதி யுண்டாகும் ஆகையால், ஆரோக்கியமுள்ள ஒரு பசுவின் கன்றின் தோலைச் சிறிது கீறி அம்மைக்குரிய சில கிருமிகளை அங்கு வைத்தால், அந்தப் பசுவின் கன்றுக்கும் அம்மை நோய் சொற்பமாகக் கண்டு பிறகு அக்கன்று சௌக்கியப்பட்டுவிடும். கீறின இடத்தில் இரத்த சாரம் சேர்ந்து நீர்க்கொப்புளங்கள் உண்டாகும். அந்தச் சாரத்தைத்தான் வைத்தியர்கள் அம்மை குத்த உபயோகிக்கின்றனர். எவருக்காவது அம்மை குத்த வேண்டுமானால் கையின் தோலைச் சுத்தப்படுத்தி, அதன்மேல் சில கீற்றுக்கள் போட்டு, அக் கீற்றுக்களில் அந்த இரத்த சாரத்தை விடுகின்றோம். அவ்வாறு அம்மை குத்திக்கொள்பவர்களுக்கு அம்மை நோய் வாராது வந்தாலும் அவ் வியாதி மும்முரமாக இராது. மேற் சொன்ன இரத்த

சாரம் அம்மை நோயைப் பரிகரிக்கின்றது அல்லது அதனைத் தடுக்கின்றது. அது இரத்த சாரம் மாத்திரம் அல்ல. ஆகையால் அதற்குப் பரிகார சாரம் (Inoculation Fluid) எனப் பெயரிடலாம். அம்மையைத் தடுக்க அம்மை குத்திக்கொள்ளுவதுபோலவே, வேறு சில வியாதிகளைத் தடுக்க அவ்வவற்றிற்கேற்ற பரிகார சாரம் குத்திக்கொள்வதால் அவ்வியாதிகளையும் தடுக்க முடியும். ப்ளேக், குடற்காய்ச்சல் முதலிய வியாதிகளைப்பற்றித் தெரிவிக்கும்போது அவற்றின் பரிகார சாரங்களைப் பற்றியும் தெரிவிப்போம்.

8. சிறு குழந்தைகளுக்கு அம்மை காணும்பரியந்தம் அஜாக்கிரதையாயிருந்து அம்மைகண்டபோது அம்மை குத்துவதனால் ஒரு பிரயோஜனமும் இல்லை. ஆகையால், பிறந்த ஆறும் மாதத்திற்குள் ஒவ்வொரு குழந்தைக்கும் அம்மை குத்தியாகவேண்டும். அதனால் ஒவ்வொரு கையிலும் இரண்டு அல்லது மூன்று தெளிவான அடையாளங்கள் உண்டாக வேண்டும். முதலில் அம்மை குத்தியானபின், பிறகு ஆறு அல்லது ஏழு வருஷத்திற்கு ஒரு முறை அம்மை குத்தவேண்டும். ஐரோப்பிய நாடுகளில் மேற் சொன்னவாறு அம்மை குத்தவேண்டும் என நிபந்தனைகள் ஏற்படுத்தியிருக்கின்றனர். அதனால் அந் நாடுகளில் அவ்வியாதியால் அநேகருக்கு உயிர்ச்சேதம் ஏற்படுவதில்லை.

9. பெரியம்மை கண்ட நோயாளியால் மற்றவர்களுக்கும் அந்த நோய் பரவுகின்றது. தொத்து நோய்கள் காற்று மூலமாகவும், உணவு மூலமாகவும், குடிக்கும் ஜலம், நோயாளிகளின் உடை, அவர்கள் தொட்ட சாமான்கள் முதலியவற்றின் மூலமாகவும்

பரவுகின்றன என முன்னரே தெரிவித்திருக்கின்ரும். ஆகையால் பெரியம்மை கண்ட நோயாளியைத் தனிப்படுத்தவேண்டும். அந்த நோயாளிக்கு அருகில் எல்லோரும் போகக் கூடாது. அவர்கள் உண்ட உணவின் மிகுதியையும், கழித்த மலஜலத்தையும் எரித்துவிடவேண்டும். கார்பாலிக் ஆசிட் (Carbolic Acid) முதலிய மருந்துகள் கரைத்திருக்கும் ஜலத்தில் கிருமிகள் செத்துப்போகும். ஆகையால், அம்மை கண்ட நோயாளியின் உடைகளை அவ்வித மருந்துகரைத்த ஜலத்தில் தோய்த்துப் பிறகே சுத்தப்படுத்தவேண்டும் அந்த நோயாளிகளுக்கு உபசரணை செய்பவர்கள் தங்கள் கைகளை மருந்து கரைத்த ஜலத்திலேயே அலம்பவேண்டும்.

10. அம்மை கண்டவர்கள், நமது கண்ணுக்குச் சௌக்கியப்பட்டாற் போலத் தோன்றினும் அவர்கள் உடம்பிலிருந்து உரியுந் தோல் உதிர்ந்துகொண்டிருக்கும். அவ்வாறு உதிருந் தோலிலும் கிருமிகள் இருப்பதனல் பிறருக்கும் அவ் வியாதி யுண்டாகும். ஆகையால், அவர்கள் சில ஸ்நானங்கள் செய்தபிறகுதான் வெளியே வரலாம். குறைந்தது ஆறு வாரங்களாகாத வரையில் அவர்கள் பிறருடன் சேரக்கூடாது.

11. சின்னம்மை :— (Measles) சின்னம்மை பெரியம்மையைப் போல அவ்வளவு கொடியதல்ல. ஆகையால் அதற்கு அப் பெயர் உண்டாயிற்று. அது பெரும்பான்மையாகச் சிறுவர்களுக்கு உண்டாகும் வியாதி. மிகச் சிறுவர்களுக்கும் கைக்குழந்தைகளுக்கும் சின்னம்மை அபாயமானதுதான். அவர்கள் அவ் வியாதியிலிருந்து சௌக்கியம் அடைந்தாலும்,

அதனால் சுவாசப் பைகளுக்குரிய சில வியாதிகள் ஏற்படுகின்றன.

12. பெரியம்மையைத் தடுத்துக் கொள்வது போலவே சின்னம்மையையும் தடுக்கவேண்டியது. ஆனால் சின்னம்மைக்கு அம்மை குத்துவதில்லை.

13. சின்னம்மைக்குரிய குறிகள் :— ஜலதோஷம் பிடித்து, நாசிகளிலும் கண்களிலும் ஜலம் வடிதல், காய்ச்சல் முதலியவை காணும். ஆகையால் அவ்விதக் குறிகள் காணப்பட்டால் உடனே வைத்தியரிடம் ஆலோசனை செய்யவேண்டும்-

14. வாந்திபேதி அல்லது விஷபேதி (Cholera) :— வாந்திபேதி மிகக் கொடிய வியாதி. அதனால் இந்தி-



(வாந்திபேதிக் கிருமிகள்.)

யாவில் அநேகர் மாள்கின்றனர். சில இடங்களில் அந்த வியாதி ஒருவரிடமிருந்து மற்றவர்களுக்குப்

பரவிக்கொண்டே யிருக்கின்றது. அவ்வியாதிக்குக் காரணம் கிருமிகள்தான். வாந்திபேதிக் கிருமிகள் குடிக்கும் ஜலத்திலும், பாலிலும், மற்ற உணவுப் பொருட்களிலும் கலந்து உடலில் புகுந்து வியாதியை யுண்டாக்குகின்றன.

15. விஷபேதிக்குரிய முக்கிய குறிகள் :— மும்முரமாகப் பேதியாவதும், வாந்தியாவதுமேயாம்.

16. விஷபேதியைத் தடுக்கும் உபாயங்கள் :— வாந்திபேதி கண்டவர் உடம்பிலிருந்து வெளியாகும் வாந்தி, மலம் முதலியவற்றில் அக் கிருமிகள் காணப்-



படுகின்றன. மலம் முதலியவற்றின் மீது ஈக்கள் உட்கார்ந்து வந்து மற்றவர்கள் உண்ணும் உணவின் மேல் மொய்க்கின்றன. அதனால் அக் கிருமிகள், அவ்-

வுணவை உண்பவர்களின் உடலில் செல்லுகின்றன. நோயாளிகளுடைய மலத்தினல் அசுத்தமாகிற ஜல-மும் அவர்கள் உடையைத் தோய்த்தலினல் அசுத்த-மாகிற ஜலமும் குடிக்கிற ஜலத்தோடு கலந்துவிடுவ-தால் பிறருக்கு அவ்வியாதி உண்டாகின்றது. ஆகை-யால், வாந்தி பேதி முதலிய அசுத்தங்களை அப்போ-



[தூசி படிந்து ஈக்கள் மொய்த்துக்கொண்டிருக்கும் தின்பண்டங்கள்]

தைக்கப்போது நீக்கி அவற்றை எரித்துவிடவேண்டும். அவற்றை எரித்துவிட முடியாவிட்டால் அவற்றில் கிருமிகளுக்கு விஷமான மருந்தைக் கலந்து ஜன-சஞ்சாரமில்லாத இடத்தில் புதைத்துவிட வேண்டும். அவற்றைக் கிணறுகளுக்கு அருகில் புதைக்கக்கூடாது.

17. நோயாளிகளுக்கு உபசரணை செய்தபின் கைகளை மருந்து கரைத்த ஜலத்தில் அலம்பவேண்டும்.

18. வாந்திபேதிக் காலத்தில், கனியாத பழங்களையும் அழுகின பழங்களையும் தின்னக்கூடாது. தூசி படிந்தும் திறந்தபடியாயும் இருக்கும் பண்டங்களையும் சாக்கடை யோரங்களில் விற்கப்படும் பண்டங்களையும் வாங்கித் தின்னக் கூடாது. நன்ருய் வேகவைத்துச் சமைத்த போஜனத்தைத்தான் சாப்பிடவேண்டும். அது சூடாகவே யிருந்தால் நல்லது. அதுபோலவே, கொதிக்கவைத்த ஜலத்தைத்தான் குடிக்கவேண்டும். வாந்திபேதிக் காலத்தில் பேதியுண்டானல் உடனே வைத்தியரிடம் ஆலோசனை செய்யவேண்டும்.

19. ப்ளேக் :— (Plague) ப்ளேக் வியாதியால் அநேக லட்ச ஜனங்கள் மாள்கின்றனர். அந்த வியாதி மிகக் கொடியது. ப்ளேக் கிருமிகள் எலியின் உடம்பிலிருக்கும் பேன்களின் வயிற்றில் காணப்படுகின்றன. எலிகளை விட்டு நீங்கிய அப்பேன்கள் நம் உடலில் தொத்திக் கொண்டு கடிப்பதால், அக்கிருமிகள் நம் சரீரத்தில் செல்கின்றன. ப்ளேக் கிருமிகள் நாய் பூனை முதலிய ஜந்துக்கள் மூலமாகவும், வஸ்திரங்கள் தானியங்கள் உணவுப்பொருட்கள் மூலமாகவும் தொத்திக்கொண்டு அநேகருக்குப் பரவுகின்றன. ப்ளேக் வியாதி முதலில் எலிகளுக்கு வருவதால் எலிகளே அந்த வியாதியைப் பரவச்செய்யக் காரணமாகின்றன.



ப்ளேக் கிருமிகளைப் பரவச் செய்யும் எலிப்பேன்



[ப்ளேகுக்குக் காரணமான எலி]

20. ப்ளேக் வியாதிக்குரிய முக்கிய குறிகள்:—தீராத தலைவலி, இடுப்புவலி, காய்ச்சல் முதலியவை காணும். பிறகு அரையிலும் கக்கத்திலும் கழுத்திலும் கட்டிகள் புறப்படும்.



[எலிகளைப் பிடிக்கத் தகுந்த பொறி]

21. ப்ளேக் வியாதியைத் தடுக்கும் உபாயங்கள் :— ப்ளேக் வியாதிக்கு எலிகளே முதற்காரணமாதலால், அவற்றை முற்றும் தொலைக்க வேண்டும். வீடுகளில்

அசுத்தங்களைச் சேரவிடுவதாலும், உணவுப் பொருட்களைத் திறந்துவைப்பதாலும், தரையில் சந்து பொந்துகளை அடைக்காமல் விட்டு வைப்பதாலும் எலிகள் சேருகின்றன. ஆகையால், அவற்றின் இருப்பிடங்களாகிய வளைகளை யடைத்துவிடவேண்டும். உணவுப்



[உணவுப் பொருட்களுக்கு மூடி]

பொருட்களைத் தகுந்த பெட்டிகளில் வைத்து மூடிவைக்க வேண்டும். வீடுகளில் அசுத்தம் சேரவொட்டக்கூடாது. அவ்வாறு செய்துவந்தால் எலிகளைத் தொலைக்கலாம். எலிகளை முற்றும் தொலைத்துவிட்டால் ப்ளேக் வியாதியும் அற்றுப் போகும்.

22. ப்ளேக் வியாதியை அடைந்தவராலும் அவ் வியாதி பிறருக்குப் பரவுவதால் அவ் வியாதியைக் கண்டுபிடித்தவுடனே சிகிச்சைகள் செய்யவேண்டும். ப்ளேக் வியாதி கண்டவரைத் தனிப்படுத்தவேண்டும். உடனே சுகாதார அதிகாரிகளுக்கு அதனைப் பற்றித் தெரிவிக்கவேண்டும். அவ்வியாதி கண்ட வீட்டிலுள்ளவர்கள் அவ் வீட்டைவிட்டு உடனே நீங்கவேண்டும். ப்ளேக் கிருமிகளைக் கொல்லக்கூடிய மருந்து கரைத்த

ஜலத்தால் அவ் வீட்டையும் வீட்டிலுள்ள எல்லாச் சாமான்களையும் கழுவவேண்டும். கிருமிகளுக்குக் காரணமாகிய எலிகளை முற்றுந் தொலைக்கவேண்டும்.

23 வியாதி கண்டவிடத்தில் உள்ளவர்களுக்கு ப்ளேக் பரிகார சாரம் குத்தவேண்டும். இராணுவத்தில் அவ்வாறு பரிகார சாரம் குத்துவதால் அவ் வியாதி பரவவொட்டாமல் தடுத்துக்கொள்கின்றனர்.

24. க்ஷயவியாதி (Tuberculosis) :— க்ஷயரோகம் பெரும்பான்மையாய் சுவாசப் பைகளில் உண்டாகும் ஒரு வியாதி. அவ்வியாதி எலும்பு குடல் முதலிய பாகங்களையும் பற்றுகின்றது. க்ஷயக்கிருமிகள் சூரிய கிரணங்கள் படாத இருண்டவிடங்களிலும், காற்று அடைபட்ட இடங்களிலும், அசுத்தம் நிறைந்துள்ள இடங்களிலும் அதிகமாகக் காணப்படுகின்றன.

25. க்ஷயவியாதி சுவாசப்பைகளைப் பற்றியிருக்கும்போது முக்கியமாய்க் காணப்படும் குறிகள் என்ன எனில் — இருமல், மந்தமான காய்ச்சல், அதிகமாகச் சளி வெளிப்படுதல் முதலியவையாம்.

26. க்ஷய வியாதியைத் தடுக்கும் உபாயங்கள் :— க்ஷயவியாதியுள்ளவர்கள் இருமுவதால் அவர்கள் வாய்வழியாய் வரும் சளியிலும் ஆவியிலும் க்ஷயக்கிருமிகளிருக்கின்றன. ஆகையால், அவர்களை அணுகியுட்காரக்கூடாது. அவர்கள் படுக்கும் அறையிலும் மற்றவர்கள் படுக்கக்கூடாது.

27. க்ஷயக்கிருமிகள் வெய்யில் வெளிச்சத்திலும் சுத்தமான காற்றிலும் செத்துப்போகின்றன. ஆகையால் க்ஷயவியாதி கண்டவுடனே அந்த நோயாளிகள்

வெளியான இடங்களில் வாசஞ்செய்தால் சௌக்கியமடையலாம். காற்ரோட்ட மில்லாத இடங்களில் வசிப்பவர்களை அவ்வியாதி பற்றிக்கொள்ள மார்க்கம் உண்டு. ஆகையால் தேகப்பயிற்சி செய்தும், நல்ல உணவு உட்கொண்டும், இரவும் பகலும் சுத்த வாயு உட்கொண்டும் வந்தால் ஒவ்வொருவரும் அவ்வியாதியைத் தடுத்துக்கொள்ளலாம்.

28. இருமல் அல்லது சளி அதிகமாக உண்டானால், உடனே வைத்தியரிடம் ஆலோசனை செய்யவேண்டும்.

29. குடற் காய்ச்சல் (Typhoid Fever or Enteric Fever) :— இது குடற்காய்ச்சல் கிருமிகளால் உண்டாகும் வியாதி. அவ்வியாதி கண்டபின் சுமார் 21 நாட்கள்வரையில் காய்ச்சலிருக்கும். குடற்காய்ச்சலுக்கு உரிய கிருமிகள் அந்தநோயாளிகள் கழிக்கும் மலஜலங்களில் காணப்படுகின்றன. ஆகையால் அவ் வியாதி எவ்வாறு பிறருக்குப் பரவுகின்றதென நீங்கள் யூகித்துக் கொள்ளலாம். நோயாளிகளைப் பிறர் தொடுவதால் அவர்கள் கைகளில் அந்தக் கிருமிகள் தொத்திக்கொள்கின்றன. அவர்கள் மலஜலத்தை அப் போதைக்கப்போது அப்புறப்படுத்தாவிட்டால் ஈக்கள் அவற்றின்மீது உட்கார்ந்து, பிறகு மற்றவர்கள் உண்ணும் உணவிலும் பாலிலும் அக்கிருமிகளைச் சேர்த்து விடுகின்றன. கிணறுகளுக்கருகில் மலத்தைப் போட்டுவிடுவதால் அம்மலமும் அதிலுள்ள கிருமிகளும் தரையில் ஊறிச் சென்று கிணற்றுநீரில் சேர்ந்துவிடுகின்றன. நோய் அவ்விதமாகப் பிறருக்குப் பரவுவதல்லாமலும், நோயாளிகள் தொட்ட சாமான்கள், உடை,

உணவு முதலியவைகளைப் பிறரும் உபயோகிப்பதால் அவர்களுக்கும் அவ்வியாதி யுண்டாகின்றது.

30. குடற் காய்ச்சலைத் தடுக்கும் உபாயங்கள்:— அவ் வியாதி கண்டவுடன் அவர்களை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய் அங்குச் சௌக்கியப்படுத்துவது நன்று. இல்லாவிட்டால் மேற்சொன்ன விதங்களாய்ப் பிறருக்கும் அவ் வியாதி வர ஏதுக்கள் உண்டாகும். நோயாளியை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனால் பிறருக்கு வியாதி யுண்டாகாதபடி ஜாக்கிரதையுடன் பார்த்துக்கொள்ள முடியும். நோயாளியை வீட்டி-லேயே சௌக்கியப்படுத்த வேண்டுமானால் அவர்கள் தொட்ட சாமான்களை மருந்து கரைத்த ஜலத்தால் கழுவ வேண்டும், அல்லது அவற்றைத் தீயில் காட்ட வேண்டும்; அதனால் கிருமிகள் செத்துப்போகும். அவர்கள் உண்ட உணவின் மீதியையும், கழித்த மல ஜலம் எச்சில் முதலிய அசுத்தங்களையும் ஜன சஞ்சார-மில்லாத இடத்தில் புதைத்துவிடவேண்டும். கிணற்-றுக்கு அருகில் புதைத்தால் கிணற்றுநீரில் அக்கிருமி-கள் சேரும். அதனால் பிறருக்கும் அவ்வியாதி யுண்-டாகும். நோயாளின் உடுத்த உடைகளை ஜலத்தில் கொதிக்கவைத்தாவது, மருந்துஜலத்தில் ஊறவைத்-தாவது சுத்தப்படுத்தவேண்டும். அவர்களுக்கு உப-சரணை செய்பவர்கள் தங்கள் கைகளை மருந்து கரைத்த ஜலத்தில் நன்றாய் அலம்பவேண்டும்.

31. ஜலதோஷக் காய்ச்சல் (Influenza):— 1918 ஆம் வருஷத்தில் ஜலதோஷக் காய்ச்சல் இந்தியாவிலும் மற்றத் தேசங்களிலும் கொள்ளைநோயாக வந்தது. அதனால் அநேக கோடி ஜனங்கள் மாண்டனர். ஆகை

யால் அந்த வியாதி எவ்வளவு விரைவில் ஒருவரிட மிருந்து மற்றவர்களுக்குப் பரவக் கூடியது என்பதை நீங்கள் அறிந்துகொள்ளலாம். அந்த வியாதிக்கும் காரணம் கிருமிகளே. அந்த வியாதியைத் தடுக்க-வேண்டுமானால் பனியாலும் வேறு விதங்களாலும் உடம்பில் குளிர் தாங்கவொட்டாமல் பாதுகாத்துக்-கொள்ளவேண்டும். உடம்பில் தகுந்த உடைகளிருக்க வேண்டும். அவ் வியாதி தோன்றுங் காலத்தில் ஜனக் கூட்டங்களில் சேருவதும் கூடாது.

32. முறைக் குளிர்காய்ச்சல் (Malaria):— இந்தக் காய்ச்சலுக்குக் குளிர்காய்ச்சல் என்றும் முறைக் காய்ச்சல் என்றும் பெயர் வழங்குகின்றது. ஆனால் அநேக வியாதிகளில் குளிர்மாத்திரமாவது அல்லது முறைப்படி காய்ச்சலாவது உண்டாவதால் அதற்கு முறைக் குளிர்காய்ச்சல் எனப் பெயரிட்டோம். அவ்-வியாதிக்குக் காரணம் கண்ணுக்குப் புலப்படாத நுட்ப-மான கிருமிகளேயாம். அவை இரத்தத்தில் விருத்தி-யாகி வியாதியை யுண்டாக்குகின்றன. அந்த வியாதி இந்தியாவில் எந்தப் பாகத்திலும்பரவி யிருக்கின்றது. அதனால் அநேக ஜனங்கள் அசௌக்கியமடைந்து துன்பப் படுகின்றார்கள். ஆகையால் அந்த வியாதி எப்படிப் பரவுகின்றது என்பதை நீங்கள் அறிந்து-கொள்வது அவசியம்.

33. நாம் படுத்து உறங்குப்போது கொசுக்கள் நம்மைக் கடித்து இரத்தத்தை உறிஞ்சுகின்றன. அவ்-வாறே முறைச்குளிர் காய்ச்சலுள்ள வியாதிக்காரரைக் கடித்து இரத்தத்தை உறிஞ்சும்போது அவர்கள் இரத்-தத்திலுள்ள நுட்பமான கிருமிகளையும் உறிஞ்சிக்-

கொள்கின்றன. பிறகு அக் கொசுக்கள் சௌக்கிய முள்ளவர்களைக் கடிக்கும்போது அச் சிறு கிருமிகளை-யும் அவர்கள் இரத்தத்தில் சேர்த்துவிடுகின்றன. அதனால் அவர்களுக்கும் அக்காய்ச்சல் உண்டாய்விடு கின்றது.

34. முறைக்குளிர்காய்ச்சலைத் தடுக்கும் உபாயங்-கள்: — அந்தக் காய்ச்சல் பரவுவதற்குக் கொசுக்களே காரணமானவை எனத் தெரிந்துகொண்டீர்கள் அல்-லவா? ஆகையால், அக்காய்ச்சலைத் தடுக்கவேண்டு-மானால் கொசுக்களைத் தொலைக்கவேண்டும்.

35. குட்டை சாக்கடை முதலிய இடங்களில் தேங்கிநிற்கும் ஜலத்தில் கொசுக்கள் முட்டையிடு-கின்றன. கொட்டங்கச்சி யளவு ஜலம் தேங்கி நின்-றாலும் அதில் அவை முட்டையிடுகின்றன. இட்ட முட்டைகள் ஜலத்தில் மிதந்து சூரியவெப்பத்தால் பொரிக்கின்றன. முட்டைகள் பொரித்தபின் புழுக்க-ளைப்போன்ற சிறு பிராணிகள் வெளிவருகின்றன. அப் பிராணிகள் ஜலத்தில் மீன்களைப்போல நீந்தி அப்-போதைக்கப்போது காற்றை உட்கொள்ள ஜலமட்-டத்திற்கு வருகின்றன. பிறகு அவற்றிற்கு இறக்கை முளைத்து ஜலத்தைவிட்டுக் காற்றில் பறக்கின்றன. ஆகையால் எவ்விடத்திலும் ஜலம் தேங்கவிடக்கூடாது. ஜலத்தை இறைத்துவிட முடியாத குளம் குட்டை முதலிய இடங்களில் மண்ணெண்ணெயை ஊற்ற வேண்டும். அப்போது ஜலத்தின் மேல்மட்டத்தை மண்ணெண்ணெய் மூடிக்கொள்வதால் பொரித்த கொசுப் புழுக்கள் போதிய அளவு காற்று கிடைக்-காமல் செத்துப் போகும்.

36. கொசுக்களை மேற் சொன்னவாறு விருத்தியடையவொட்டாமல் தடுப்பதுமல்லாமல், நித்திரை செய்யும் போதும் கடிக்கவொட்டாமல் அவற்றைத் தடுத்துக்கொள்ள வேண்டும். கொசுக்கள் வீட்டில் சேரவொட்டாமலிருக்கப் படுக்கை யறைகளில் அதிகமான சாமான்களை வைத்துக்கொள்ளக் கூடாது. அந்த அறைகளில் காற்றோட்டம் இருக்கவேண்டும். பணச்செலவு செய்யச் சக்தியுள்ளவர்கள் கொசுவலை போட்டு அதற்குள் நித்திரை செய்தால் கொசுக்கள் கடிப்பதை முற்றும் தடுக்கலாம்.

37. முறைக் குளிர் காய்ச்சல் கண்ட நோயாளிகள் வைத்தியரிடம் ஆலோசித்து அவர்கள் சொற்படி குனைன் (Quinine) மருந்தைச் சாப்பிட்டு வரவேண்டும். அவ்வாறு செய்யாமல் போலி வைத்தியரிடஞ் சென்று அப்போது மாத்திரம் வியாதியைக் குணப்படுத்திக் கொண்டால் வயிற்றில் 'காய்ச்சல் கட்டி' உண்டாகும். அவர்களுக்கு இரத்தம் குறையத் தோல் வெளுத்துப்போகும். பலமும் குறைந்துவிடும். சிலருக்கு அதனால் பலவீனமுண்டாகி வேலைசெய்ய முடிவதில்லை. பலவீனத்தாலேயே அவர்கள் இறந்துபோகின்றனர். ஆகையால், அவ்வித வியாதியைத் தடுத்துக்கொள்ள முயலவேண்டும். இந்த நோய் நம் நாட்டில் சர்வ சாதாரணமாய் இருப்பதால் நம்மவர்கள் இதைப்பற்றிக் கவனிக்கவேண்டும்.

38. கோக்கிப் புழு வியாதி :— (Aukylostomiasis or Hook-worm Disease) இந்த வியாதி ஒருவித புழுவால் உண்டாகின்றது. அப் புழுவின் தலைப்பக்கம் குடைக் கைப்பிடி அல்லது ஒரு கொக்கியைப்போல வளைந்திருப்பதால் அதற்குக் கொக்கிப்புழு எனப் பெய-

ரிட்டோம். அந்தப் புழு இந்தியாவில் எந்தப் பாகத்திலும் காணப்படும். அதனால் அநேகருக்கு வியாதியுண்டாகின்றது. முக்கியமாய் வயலிலும், காப்பித் தோட்டங்களிலும், தேயிலைத் தோட்டங்களிலும் வேலை செய்பவர்களுக்கு அவ் வியாதி யுண்டாகின்றது. அப் புழுக்கள் நம் தேகத்திலுள்ள நீண்ட குடலில் இரத்தத்தை உறிஞ்சிக்கொண்டு வாழ்கின்றன.

39. கோக்கிப் புழு வியாதிக்குரிய குறிகள் :— இவ் வியாதி யுள்ளவர்களது தோல் வெளுத்துவிடுகின்றது. அவர்களது தசை வலியிழந்து மிருதுவாய்விடுகின்றது. தேகத்திலும், முகத்திலும் வீக்கமுண்டாகின்றது. அவர்களுக்கு வேலை செய்யக் கொஞ்சமேனும் சக்தி யிருப்பதில்லை. இலகுவான தொழில் செய்தாலும் அவர்களுக்கு பெரு மூச்சு வாங்கும். இவ் வித வியாதியால் அநேக ஜனங்கள் மாள்கின்றனர். மற்றும் அனேகருக்குத் தேகபலம் மிகவும் குறைந்துவிடுவதல்லாமல், புஸ்தகங்களைப் படித்து விஷயங்களை ஊகிக்கவும் சக்தி குறைந்துவிடுகின்றது.

40. கொக்கிப் புழு எவ்விதமாய் ஜனங்கள் உடலில் செல்லுகின்றது என்பதைப் பற்றிச் சிறிது விவரமாகத் தெரிந்துகொள்ளவேண்டும். நோயாளிகளின் குடலில் கொக்கிப்புழு முட்டையிடுகின்றது. அம் முட்டைகள் மலத்தின் மூலமாக வெளியாகின்றன. வெளியான முட்டைகள் பொரித்து அதனால் உண்டாகும் சிறு புழுக்கள் தரையின்மீது ஊர்ந்துகொண் டிருக்கின்றன. வயல்களில் வேலை செய்பவர்களுக்குக் காலில் ஏதேனும் காயமிருந்தால் அக் காயத்தின் வழியாய் அவை உடலில் செல்லுகின்றன.

41. கொக்கிப் புழு வியாதியைத் தடுக்கும் உபாயங்கள் :— பூச்சிகள் எவ்வாறு உடலில் செல்லுகின்றன என்பதைத் தெரிவித்தோம். அப்புழுக்கள் மலத்தில் காணப்படும் முட்டைகளிலிருந்து உண்டாகின்றன எனவும் தெரிவித்தோம். ஆகையால் வயல்களிலும், கொல்லைக ளல்லாத மற்ற இடங்களிலும், ஜனங்கள் மலஜலங்கள் கழிக்கக்கூடாது. மலத்தை அப்போதைக் கப்போது அப்புறப்படுத்திவிடவேண்டும். அதனை எரித்துவிடுவது மிகவும் நன்று. வேலை செய்பவர்கள் காலில் புண் அல்லது காயமிருந்தால் காலில் மண் படவொட்டாமல் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். அப் புழுக்கள் நிறைந்த நிலங்களில் நடப்பவர்கள் தம் பாதங்களும், கணுக்கால்களும் மறையக்கூடிய உயரமான பாதரக்ஷைகளைப் போட்டுக்கொள்ள வேண்டும். கொக்கிப் புழுநோய் உள்ளவர்களுக்குத் தகுந்த ஔஷதம் கொடுத்து அவர்களைச் சௌக்கியப்படுத்த வேண்டும். அவர்கள் மலத்தை எரித்துவிட வேண்டும். அந்த வியாதி அநேகருக்கு வெளிப்படையாய்த் தெரியாம லிருக்கலாம் ஆகையால், காப்பித் தோட்டம், தேயிலைத் தோட்டம், வயல் முதலிய இடங்களில் வேலை செய்பவர்கள் அனைவருக்கும் தகுந்த ஔஷதம் தரவேண்டும். அதனால் நோயாளிகள் அனைவரையும் சௌக்கியப்படுத்தலாம்.

42. யானைக்கால் வியாதி :— சிலருக்குக் கால்கள் பருத்திருப்பதை நீங்கள் அனைவரும் பார்த்திருப்பீர்கள். யானையின் கால் எவ்வளவு பருமனாயிருக்கின்றதோ அவ்வளவு பருமனாகவே அவர்களின் கால்களும் பருத்திருக்கலாம். ஆகையால் அவ் வியாதிக்கு யானைக்கால் வியாதி என்று பெயர். இதுகாலில் மாத்-

திரமல்லாமல் மற்றப் பாகங்களிலும் காணப்படலாம். அந்த வியாதிக்கு ஒரு வகைப் புழுவே காரணம் அப் புழு கொசுக்களின் மூலமாகப் பரவுகின்றது. யானைக்-கால் நோயாளியைக் கொசு கடித்து, இரத்தத்தை உறிஞ்சும் போது அதனுடன் இளம் புழுக்களையும் உறிஞ்சிக் கொள்கின்றது. பிறகு, அவ்விளம் புழுக்கள் கொசுவின் உடலில் வளர்கின்றன. அதன் பிறகு



கொசு ஜலத்தில் முட்டை யிடும்போது அவ் விளம் புழுக்களும் ஜலத்தில் செல்லுகின்றன. அந்த ஜலத்-தைக் குடிப்பவர்களுக்கு அந்த வியாதி உண்டா-கின்றது. அதனால் அவ் வியாதியைத் தடுக்க வேண்டு-மானால், எவரும் ஜலத்தைக் கொதிக்கவைத்த பிறகு-தான் குடிக்க வேண்டும்.

43. சொறி சிரங்கு (Itches) :— சொறி சிரங்கு அசுத்தத்தால் உண்டாகும் ஒட்டுநோய்களில் ஒன்று. அவ் வியாதிக்குக் காரணம் வெகு சிறிய பிராணிகளே-யாம்; அவை தோலில் சுடித்துத் தோண்டுகின்றன. அதனால் புண் உண்டாகின்றது. அவ்வாறு உண்டா-கும் புண் பெரும்பான்மையாய் கைவிரல் இடுக்குகளில்

காணப்படும். சொறி சிரங்கு அதிசீக்கிரத்தில் மற்றவர்களுக்கும் ஒட்டிக் கொள்கின்றது. ஆகையால், நீங்கள் சிரங்கு பிடித்தவன் பக்கத்தில் உட்காரக் கூடாது. சிரங்கு பிடித்தவர்களுடைய உடையை ஜலத்தில் கொதிக்கவைத்துச் சுத்தஞ் செய்யாமல் பிறர் உபயோகப்படுத்தக் கூடாது. சிரங்கு பிடித்துக் கொண்டால் கைகளை நன்றாய் அலம்பி அவற்றிற்குத் தகுந்த மருந்து போடவேண்டும்.

## 8. ஜந்துக்களின் நிறங்களும் அவற்றின் பயனும்

ஆடுதலிற் பெயர்பெற்ற ஆண்மயில்மட்டும் அழகிய தோகைகொண் டிருப்பதேன்? நல்ல பாம்பு தனது படத்தை விரிக்க அதனிடையில் அரக்கன் கண்போல் இரண்டு பயங்கரமான ரேகை தோன்றுவதேன்? பச்சோந்தி பன்முறையுந் தன் நிறத்தை மாற்றியாற்றி ஒளிப்பதேன்? சிலந்திப்பூச்சியிற் சில எறும்பைப்போல் வேடம் பூண்டு பார்ப்போரை ஏமாற்றுவது ஏன்? முதலிய வினக்கட்கு ஒருவாறு விடை கூறுவோம். ஒவ்வொரு பிராணிக்கும் ஒரே நிறம் அல்லது பல நிறங்கலந்த உருவுண்டு. அந் நிறத்தால் அதற்கு எவ்வளவு பயனுண்டாம் என்னும் விஷயத்தைப்பற்றி யோசித்தல் வேண்டும். வர்ணங்களால் ஜந்துக்களுக்கு முதன்முதல் யாதாமொரு பயனிருந்திருக்குமோ என்பதைப்பற்றி நிச்சயமாய் இப்போது சொல்லுவதரிது. ஆனல், சிலமட்டும் தம்மிடத்துள்ள ஒருவிதச் சக்தியால் முதலில் தாங்கொண்ட நிறத்தைச் சிறிது சிறிதாய் வேறாக்கி, அம்மேனியால் தமக்கோ

பிறருக்கோ பயனுண்டாக்குகின்றன என்பது பின் வருவனவற்றால் விளங்கும்.

பிராணிகளின் நிறத்தை, அதனால் உண்டாம் பயனுக்குத் தக்கவாறு, பிரிவுகள் செய்திருக்கிறார்கள். அப் பிரிவுகளில் முக்கியமானவை ஆறு ; அவை-யாவன :

(1) பயன்படா நிறம் ; (2) தற்காப்பு நிறம் ; (3) வசீகர நிறம்; (4) எச்சரிக்கை நிறம்; (5) போலி நிறம் (அல்லது பொய்நிறம் அல்லது கபடவேஷம்) ; (6) சம்யோகநிறம் என்பனவாம். அவற்றில் ஒவ்-வொன்றையும் பற்றிச் சிறிது சொல்லுவோம்.

(1) பயன்படாநிறம் :

காக்கை கருமையா யிருக்கிறது. அதற்கு இந்த நிறத்தால் யாதேனும் பிரயோஜனம் உண்டா என்ற கேள்விக்கு இல்லையென்றே உத்தர முரைத்தல் தகுதி-யாம். இத்தகைய நிறத்திற்குப் பயன்படாநிறம் என்று சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள்.

(2) தற்காப்புநிறம் :

சில பிராணிகள் தாங்கொண்ட நிறத்தால் தம்-மைத் தம் எதிரியிடமிருந்து காப்பாற்றிக்கொண்டு சுகமாய்க் காலங் கழிக்கின்றன. இங்ஙனம் பயன்-படும் வர்ணத்திற்குத் தற்காப்பு நிறமென்று (Protective coloration) பெயர். மரங்களின் பசுமை வாய்ந்த இலைகளினிடையே, இலைக்குந் தனக்கும் பேதம் புலப்-படாவண்ணம், பச்சைப்பாம்பு காலங்கழிக்கின்றது. அதைச் சுலபமாய் இலைகளின் மத்தியில் காண்பது மிக அரிதாம். கூர்மையான பார்வையுள்ளவர்களும் அது

மரங்களின்மேல் நெளிந்து ஓடுவதைக் கண்டு ஆச்சரியப் படுகிறார்கள். மற்றொரு பாம்பு பாலைவனங்களிலும் மணற்சாரலான இடங்களிலும் வசிக்கும். அதை நம்மவர்கள் இரட்டைத்தலைப் பாம்பென்றும், ஆறுமாதம் முன்புறத்தாலும் ஆறுமாதம் பின்புறத்தாலும் ஊர்ந்து காலங்கழிக்கும் என்றுங் கூறும் பெரும் பொய்யை மெய்யென்றும் நம்புகின்றனர். மற்றப் பாம்புகளின் வாலைப்போல் இதன் வால் கூர்மையாய் இராமல் சற்றுக் கூழையாய் அதன்மேரில கண்கள் போன்ற இரண்டு கறுத்த புள்ளிகளைக் கொண்டு, இருப்பதைக் கண்டு மயங்கி, வாலையும் தலை என்கின்றார்கள் போலும். இம் மணற்பாம்பு தன்னைச் சுற்றிலும் உள்ள மணலின் நிறத்தையே கொண்டிருக்கிறது. மணலில் விழுந்து புரளுங்கால் மணலினின்றும் இதை வித்தியாசப் படுத்திக் காண்பது அதிக கஷ்டமாம். இங்ஙனமே தம்மைச் சுற்றியிருக்கும் பொருள்களின் நிறத்தை மேற்கொண்டு வாழ்வன தோட்டங்களிற் செடியின்மேல் அகப்படும் சில சிலந்திப் பூச்சிகளாம. சிறு கொம்புகள்போலவும், சிறு விதைகள் போலவும், சிறு பூவரும்புகள்போலவும் வேஷங்கொண்டு பார்ப்போரை ஏமாற்றுகின்றன சிற்சில ஜந்துக்கள்.

கோயமுத்தூர், பழநி, நீலகிரி முதலிய இடங்களில் இலைப்பூச்சியென்னும் ஒரு பிராணியைச் சாதாரணமாய்க் காணலாம். அதற்கும் அது தின்னும் இலைக்கும் ஒருவித மாறுபாடுங் காண்பதரிது. நமது கண்களுக்கு எதிரிலேயே இலையைத் தின்றுகொண்டிருக்க, அதை நாம் காண்பது மிகவும் அசாத்தியமாக இருக்கும். இதைப் போலவே செடிகளில் வசிப்பது

இன்னொரு பூச்சி உண்டு. அதைக் கொம்புப்பூச்சி என்பார்கள். அதற்கு ஜபப்பூச்சி யென்று மற்றொரு பெயருமுண்டாம். இப்பெயர் வரவேண்டிய காரணம் என்னவோ? நாம் ஜபஞ் செய்யுங்கால் இரண்டு கைகளையுங் கூப்புவது போல், அது உட்காரும்போது தன் முன்னிரண்டு காலையும் சேர்த்து உயரத்தூக்கி உட்காரும். இது கொம்புகளைப்போல் நீண்டு மெலிந்த உருக்கொண்டு செடிகளில் வாசஞ்செய்யும்,

குளிர்காலம் நெருங்கவே, எங்கும் பனிக்கட்டி விழுந்து ஒரே வெண்மையா யிருக்க, அதற்குத் தக்கவாறு உத்தரப் பிரதேசங்களிலுள்ள மிருகங்களுக்கும் பட்சிகளுக்கும் நிறம் சுத்த வெண்மையாக மாறுகின்றது. மறுபடியும் கோடைக்காலம் திரும்ப, அவை முன்பு தாங்கொண்டிருந்த மேனியையே திரும்பவும் அடைகின்றனவாம்.

கடலின் மேற்புறத்தில், முதுகெலும்பில்லாச் சில பிராணிகள் வாழ்கின்றன. அவற்றைப் பெருமீன்களும் மற்றக் கடல்வாசிகளும் ஆவலாய் உண்ணும்; ஆதலால், எதிரியிடமிருந்து தப்பியோடிப் பிழைக்கும்பொருட்டு அவை கண்ணாடிபோல் தெளிவான தேகம் உடையனவா யுள்ளன. தண்ணீருக்கு மேலிருந்து இவற்றின் வழியாய்ப் பார்க்கக் கடல்நீரின் நீலநிறம் தோன்றும்; கீழிருந்து பார்க்க ஆகாயத்தின் நீலவர்ணம் புலப்படும்; ஆகவே, எவ்வாறு நோக்கினும் இவற்றின் சுயரூபம் தோன்றுவதில்லை. இவ்விதமான உயிர்களை இவ் வகுப்பில் சேர்க்கவேண்டும்.

கடலில் 'கடமான்' என்று ஒரு மீன் உண்டு. அதற்குத் தலையைச் சுற்றிலும் பத்துக் கைகளும்,

தலையின் மீது விசாலமான இரண்டு கண்களும் உண்டு. கண்கள் மானின் கண்களைப்போ லிருப்பதால் இதற்குக் கடமான் (கடல் மான்) என்று பெயரிட்டார்கள் போலும். பச்சோந்தியைப்போல் கடமானும் தன் நிறத்தை அடிக்கடி மாற்றும். இதன் நிறம், கண்ணைப் பார்க்குமளவும் இடைவிடாது மாறும். இந்த வேடிக்கையைக் கண்ட இதன் எதிரிகள், 'இஃதென்ன, ஒரு ராக்ஷசன்போலும், கிட்ட நெருங்கினால் விழுங்கிவிடும்' என்று நினைத்து, பல திக்குகளிலும் ஒடியொளிக்கும். ஆனால், இது மாயவித்தையென்று அறிந்த சில பெரிய மீன்கள் கடல்மானை விழுங்கப் பின்றொடர்ந்து ஒடும்; அக்காலத்தே கடல்மான் வேறோர் உபாயத்தால் அந்த மீனை வென்று ஒடி யொளிக்கும். எதிரியைத் தன்னருகில் கண்டதும், தன்னிடத்துள்ள மைநிறைந்த ஒரு பையைத் திறக்கவே, கறுப்பு மையால் கடல்நீரில் சுற்றிலும் இருளடர்ந்து போம். அவ்விருளில், துரத்தும் மீன் வழிதடுமாறித் திகைத்துநிற்க, கடல்மான் கண்ணுக்கெட்டாத தூரம் நீந்தியோடி மறைந்துவிடுமாம்; இது என்ன ஆச்சரியம்!

(3) வசீகரநிறம்:

இனிச் சில ஜந்துக்கள், தம் நிறமே காரணமாகிய சிலவுபாயத்தால் பிற பிராணிகளை வசீகரித்து, அவை கிட்ட நெருங்கவே அவற்றைத் தமக்கு இரையாக்கிக் கொள்ளுகின்றன. ஆசியாக்கண்டத்துச் சில பாலைவனங்களில் மணல்வர்ணங் கொண்ட ஒரு பல்லி யுண்டு. அதன் வாயின் இரு மூலைகளிலும் இராநின்ற மிகச் சிவந்த இரண்டு ரேகைகள் தூரத்துப் பார்வைக்கு அழகிய மலர்கள்போல் தோன்றும். பூவின்

தேனைக்குடிக்க அலைந்து திரியுஞ் சில பூச்சிகள் அப்போலிமலர்களைக் கண்டு மயங்கிச் சமீபித்து நெருங்கவே, வஞ்சகத்திற் றேர்ந்த அம்மணற்பல்லி அப்பூச்சிகளை மிக்க களிப்புடன் பற்றித் தின்னும். தூண்டிற்காரமீன் என்று பெயர்பெற்ற ஒரு மீனும் இதே மாதிரி சூது செய்கின்றது. இதன் வாயைச் சுற்றிலும் ஓயாது அசைந்தாடுஞ் சிம்புகள் உண்டு. அவற்றைச் சிறு புழுக்களென்று நம்பி, வேறு சிறுமீன்கள் தின்பதற்காக அதன் அருகிற் போய் தாமே அதற்கு இரையாகிவிடும்.



(4) எச்சரிக்கை நிறம் :

சில பிராணிகள் தாம் கொண்ட நிறத்தால் பிறரைப் பயமுறுத்துகின்றன; 'என்னருகில் வாராதே, வரின் அபாயம்' என்னும் எச்சரிக்கையைத் தமது நிறங்களால் காட்டுகின்றன. விஷப்பாம்புகளுக்கெல்லாம் அரசனாகிய நல்ல பாம்புக்கு, இந்த நல்லகுணம் பற்றியன்றே, அப்பெயர் வந்தது; ஒருவரைக் கண்டதும் சீறிக்கொண்டு படத்தை விரித்து ஓடிவருகின்றது. அது விஷத்தால் தீண்டி உயிரை மாய்ப்பதற்கே அங்ஙனஞ் செய்கின்றது என்று நாம் கொள்வது சரியன்று. ஏனெனில், அதனால் நமக்கு உண்டாகும் அபாயத்தைப் பற்றி அது எச்சரிக்கை செய்கிறதே யொழிய, கண்டதை யெல்லாம் விஷத்தால் தீண்டிக் கொல்வதற்காக அன்று. நஞ்சானது அடிக்கடி அபரிமிதமாய் உண்டாகாது; கொஞ்சமாகச் சாவகாசமா யுண்டாகும். கண்டவற்றை யெல்லாம் அவ்வளவு அரிய விஷத்தால் தீண்டி, வீணாக்குவதில் நல்ல பாம்புக்குப் பிரியமிராது. ஆகவே, அதை எவ்வளவுக் கெவ்வளவு

மட்டாகச் செலவிடுகிறதோ அவ்வளவுக் கவ்வளவு பாம்பிற்குப் பயன் உண்டாம். இந்த நற்குணம்பற்றியே, நல்லபாம்பு நமக்குத்தகுந்த எச்சரிக்கைசெய்து, தன் விஷத்தைக் காப்பாற்றிக்கொள்ள நினைக்கிறது. இதற்கு முக்கிய காரணமா யிருப்பது இதன் படமாம். படத்தை விரித்தாட, அதன்மேலுள்ள இரண்டு கண்கள்போன்ற ரேகைகள் பார்ப்போரைப் பயமுறுத்துகின்றன.

தன்னிடத்துள்ள கெட்டகுணத்தைப் பிறரறிந்து விலகிப்போம் பொருட்டே நஞ்சு நிறைந்த கடற் பாம்புகள் பலவித நிறங்கொண்டு வாசஞ் செய்கின்றன.

அமெரிக்காவின் உஷ்ணப் பிரதேசங்களில் பவளப்பாம்பு என்று ஓர் அரவமுண்டு ; அது கொடிய விஷமுள்ளது ; மிகவும் கறுத்ததும் சிவந்ததுமான மேனியையுடையது. இத்தகைய வெறுப்புள்ளகுணங்கள் பற்றியே வண்ணாத்திப் பூச்சி, பட்டுப்பூச்சி முதலியவற்றின் புழுக்கூடுகளிற் சில, சுத்த தங்கமயமாய் விளங்குகின்றன. இதை யறிந்த பறவைகள் அவற்றைத் தீண்டுவதும் இல்லை.

இராக்காலங்களில் நமது வீடுகளில் பறக்குஞ் சிறு வண்டை யாவரும் பார்த்திருக்கக் கூடும். அதன்மேல் இரட்டை வரிசையாய்க் கறுப்புப் புள்ளிகள் வெகு தீர்க்கமாய்த் தோன்றும். இது இவ்வாறு வர்ணங்கொண்டது தன்னிடத்துள்ள ஒரே கெட்ட குணத்தைப் பிரசித்தப் படுத்தும் பொருட்டேயாம். அதாவது அகஸ்மாத்தாய் அதை யாரேனுந் தொட்டால், அதன் பின்புறத்தினின்று உடனே, 'வெடீர்' என்ற சத்தத்துடன் ஒரு விஷத்திராவகம் வெளி-

வரும்; அது நமது கையைச் சுடும்; சிறு பூச்சிகளின் மேற்பட்டால் அவை உடனே உயிர் துறக்கும். இங்ஙனஞ் சத்தம் பண்ணுவது காரணமாக இதற்குப் பீரங்கிவண்டு என்றும் பெயராம்.

(5) போலி நிறம்:

இன்னுஞ் சில பிராணிகள் வேறு பிராணிகளைப்போல் வேஷந் தரிப்பன. சில சிலந்திப் பூச்சிகள் எறும்புபோலும், தேனீப்போலும், குளவி போலும் வேடம் பூண்டு அவற்றோடு வித்தியாசமின்றிக் கலந்திருந்து அவற்றில் சிலவற்றை நூலாற் சுற்றித் தமக்கு இரையாக்கிக்கொள்ளும். இவ்விதம் மித்திரபேதஞ் செய்யுஞ் சிலந்திப் பூச்சியின் கபடத்தை எறும்பாவது தேனீயாவது சிறிதும் அறிவதில்லை.

(6) சம்யோக நிறம்:

சில ஜெந்துக்களின் வர்ணமானது, ஆண், பெண்ணைக் கவருவதிற் பயன்படுகின்றது. சிலந்திப் பூச்சிகள் தம் வீரச்செய்கைகளினாலும் சிலம்பாட்டங்களினாலும் மணப்பெண்ணின் கையைப் பிடிக்கும். சில ஆண்பறவை தமது இனிய குரலாற் கானங்கள் பாடித் தம் பெடையைக் களிக்கச்செய்யும். இவ்வாறே தமது அழகிய மேனியைக்கண்டு பெடைகள் ஆசைகொள்ளும்பொருட்டுத் தம்முடைய செவ்விய தோகையை விரித்தாடுகின்றன ஆண்மயில்கள். எதனுடைய தோகை மிக அழகாயிருக்கின்றதோ அதனையே கைப்பற்றும் பெண்மயிலும். இது காரணம்பற்றியே சாதாரணமாய், பெட்டைகளிலும் ஆண்பறவைகள் மிக்க வனப்பு வாய்ந்திருக்கின்றனவாம்.

## 9. செய்வன திருந்தச் செய்

நாம் எந்தத் தொழிலைச் செய்யினும் அதனைத் திருந்தச் செய்யவேண்டும். உலகத்தில் ஒருசிலரே தமது தொழிலில் திறமையும் புகழும் அடைகின்றனர். பெரும்பான்மையோர் அத்துணைச் சிறப்படைவதில்லை. அதற்குக் காரணம் ஒன்றே; அஃதாவது தாம் எடுத்த தொழிலை ஊக்கத்துடன் தம்மாலியன்ற அளவு உழைத்து, மெய்வருத்தம் பாராமல் இனிது முடிப்பவர் புகழைப் பெறுகின்றனர்; ஏனையோர் சோம்பலினாலும் ஊக்கமின்மையாலும் தக்க உழைப்பு இன்மையாலும் பல குறைகள் விரவத் தமது தொழிலைச் செவ்வையாகச் செய்யாது ஒழிகின்றனர். இஃது எத்துணைத் துன்பத்தைச் செய்யவல்லது என்னும் விஷயத்தை ஊன்றி நோக்குவார்களானால் ஒருவரும் இவ்வாறு செய்யத் துணியார். நம் தமிழ் நாட்டுக்குத் திலகம்போல் விளங்கிய அவ்வைப்பிராட்டியார் பல நூற்றாண்டுகட்கு முன்னரே செய்வன திருந்தச் செய் என்னும் இவ் வரிய வாக்கியத்தைப் பொன்போல் எடுத்துக் காட்டியுள்ளார். இவ் வாக்கியத்தையும் இதன் பொருளையும் நாம் நன்கு அறிவோமாயினும் இஃது, எவ்வளவு அனுபவமுதிர்ச்சியின் பயனாக வெளிவந்தது என்பதை முற்றும் அறிந்தோமில்லை.

2. உலகத்தில் பலவகைத் தொழில் முறைகள் இருக்கின்றன. அவற்றுள் ஒவ்வொருவரே ஒவ்வொரு தொழிலில் சிறக்கின்றனர். சித்திரம் வரைதல், செய்யுள் இயற்றுதல், இசை பாடுதல், நல்ல வசனம் எழுதுதல் முதலான ஒவ்வொரு தொழிலில் ஒவ்வொருவன் தேர்ச்சியடையப் பல வருஷங்கள் இராப்பகலாகக்

கண்ணுங் கருத்துமாக இருந்து உழைத்துப் பயின்றிருக்கவேண்டும். இல்லையேல், இவைகளில் பெருமை பெறத்தக்க அவ்வளவு தேர்ச்சியை அவன் பெறுவது அரிது. முதலில் எழுதப் பழகும்போது எவ்வளவோ இடர்ப்படுகின்றோம். எழுத்துக்கள் செவ்விதாக உரு அமைவதில்லை. ஆனால், பலநாள் இடைவிடாது செய்யும் பழக்கத்தால் முத்துக் கோத்தாற்போல் மிகவும் எளிதாக எழுதும் ஆற்றலைப் பெறுகின்றோம். அங்ஙனமே பேசப்பழகும்போதும் பல தட்டுத்தடைகள் நிகழ்கின்றன. நாம் மேன்மேலும் சிறிது சிறிதாகத் தளரா முயற்சியுடன் அழகுறப் பேசப் பயில்வோமாயின், அதன் பின்னர், சொற்களை வரிசை வரிசையாகக் கோத்து, கேட்போர் செவிக்கு அமுதம்போலப் பேசுந் திறனைப் பெறுவோம். முதலில் தெற்றுவாயராக இருந்த பலர் பிற்காலத்தில் தமது சிறந்த உழைப்பின் பயனாக உலகமெல்லாம் போற்றத்தக்க வசன நிர்வாகிகளென வெளிவந்து புகழ்க்கொடியை நாட்டினர்.

3. நாம் நமது வேலைகளைத் திருத்தமாக உண்மையன்புடன் சிறிதும் பின்னடையாது செய்வோமாயின் நமக்கு எக்காலத்தும் எவ்விடத்தும் சிறப்பும் செம்மையுமே சேரும். ஒரு தொழிலில் நாம் மிகவும் வல்லவரெனத் திகழுவோமாயின், அதனினும் வேறு சிறப்பு யாதுளது? பொருளும் பெறலாம்; புகழும் உண்டு, புண்ணியமும் பெருகும். யாவரும் அத்தொழிலை முடிப்பதற்கு நம்மையே நாடி வருவர். நமது கைக்கு வந்த ஒரு காரியம் எவ்வளவு சிறியதாயினும், எத்தகைய பயனையும் நமக்குத் தரமாட்டாதாயினும், நாம் அதனை அவமதிப்புடன் விட்டு

விடாமல், நம்மால் இயன்றவளவு பாடுபட்டு முயன்று, பலமுறையும் சோம்பலின்றிச் செய்தவற்றைத் திருப்பித் திருப்பிப் பார்த்து, அவசியமான திருத்தங்களையும் மாறுதல்களையும் செய்து, நம் மனத்துக்குப் பூரண திருப்தி வந்தபிறகு வெளிப்படுத்தவேண்டும். அவ்வாறு அங்கிலப் புலவர் பலர் இன்றும் செய்து போதருகின்றனர். அத்தகையோரே எல்லாருக்கும் மேலாக முதன்மையையும் ஏற்றத்தையும் எய்துகின்றனர்.

4. நமது நாட்டிலோ ஒரு காரியத்தை அரைகுறையாகச் செய்தலே பெரும்பாலும் வழக்கமாகின்றது. ஒருவர் தம் காரியத்தைச் செய்துமுடித்தவுடன் தாம் அதனைச் செவ்வையாகச் செய்யவில்லை யென்று சொல்லித் துன்புறுகின்றார். ஏன் அதனைத் திருந்தச் செய்யக்கூடாது? நமது திறனுக்கு ஏற்றவகையில் நம்மையே நாம் வஞ்சித்துக் கொள்ளாமல் செய்து முடித்தோம் என்ற மகிழ்ச்சி எவ்வளவு இன்பத்தைத் தரத்தக்கது. இத்தகைய பேரின்பத்தைப் பெறுதற்கு ஒவ்வொருவரும் ஆசைப்படவேண்டும்.

5. இன்ன வேலையை இன்னாரிடம் ஒப்பித்தோம், அவர் அதனை முழுமனத்துடன் திருந்தச்செய்வார் என்ற நம்பிக்கை நம்பால் யாவருக்கும் வரும்படி நடந்துகொள்ள வேண்டும். அதனால் நம்மிடம் தமது தொழிலை ஒப்பித்தவருக்கு எவ்வளவு ஆறுதலும் உவகையும் உண்டாகும்! நாம் மேன்மேலும் விருத்தியடைய வேண்டுமாயின், நாம் மேற்கொண்ட வேலைகளைத் திறமையாக, அழகாக, ஒழுங்காக, பிறரைக் காட்டினும் நன்றாகச் செய்யவேண்டும். ஒருவன் ஓர்

உத்தியோகசாலையில் சம்பளமின்றியே உழைக்க வேண்டிய காலம் இருக்கலாம். அப்போது அவன், 'எனக்குத்தான் சம்பளம் இல்லையே, நான் ஏன் எனக்-கிட்ட பணிகளை ஒழுங்காகச் செய்யவேண்டும்' என எண்ணி, அதை அரை குறையாகச் செய்வானயின், அவன் எப்பொழுதும் கடைப்பட்டவனே யாவான். அவ்வாறு இன்றி, 'எந்த வேலை யாயினும் எனக்குக் கொடுத்ததைக் கைம்மாறு சிறிதும் கருதாமல் முடிப்-பேன்; அதனை நான் திருந்தச் செய்தேன் என்னும் திருப்தி ஒன்றே எனக்குப் போதும்' என்று எண்ணிச் செய்பவன் பிற்காலத்தில் மிகப் பெரியோனாய் உலகம் புகழத்தக்க மேன்மையை அடைவான்.

6. ஆகையால், நாம் அனைவரும் இப்பழக்கத்தை ஒழுக்கத்தில் கொண்டுவர வேண்டும். நமது வேலை-களை முதலில் வகுத்துக்கொண்டு, அவற்றைக் காலம், இடம், பொருள், ஏவல் முதலானவைகளோடு பொருத்திச் செய்வதையே பெருங் கோட்பாடாகக் கொள்ளவேண்டும். இவ்வாறு நாம் செய்வதோடு, நம் சிறுவர்களையும் இப்பழக்கத்தில் முனைந்து நிற்கும்-படி செய்யவேண்டும். அவர்கள் சரியாகச் செய்கிற-வரையில் நூறுமுறையானாலும் விடாதுசெய்யும்படி வற்புறுத்தி இப்பழக்கத்தில் அவர்கள் தலைசிறந்து விளங்கும்படி செய்தல் வேண்டும். பள்ளிக்கூடத்தில் இவ்வாறு பழகிவிடுவார்க ளாயின், தமது வாழ்க்கை நாட்களில் தாங்கள் தமது கடமைகளை இனிது நிறை-வேற்றித் தாம் பயன்பெறுவதுடன், பிறருக்கும் பயன் படும்படி இருப்பார்கள். அதனால் பல தீமைகளும் இடர்ப்பாடுகளும் நீங்கும்.

## 10. ஏழு புண்ணிய நகரங்கள்

இந்து தேயத்தின்கண் முக்திதரும் நகரங்களெனச் சிறப்புற்ற புண்ணிய ஸ்தலங்கள் ஏழு உண்டு — அவை அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்பனவாம். இப்பெயர்களின் காரணங்களை இங்குச் சுருக்கமாய்க் கூறுகின்றோம்.

2. அயோத்தி என்பதற்கு எதிர்க்கக் கூடாதது என்பது பொருள். இந்தப் பட்டணம் சூரியவமிசத்து முதலரசனான இக்ஷ்வாகு என்பவருக்குப் பிரமதேவனால் கொடுக்கப்பட்டது எப்படிப்பட்ட சூரராலும் எதிர்க்கப்படாதது என்னும் வெளிப்படையான காரணங்காட்டி, முக்காலமும் உணர்ந்த வசிஷ்டமுனிவரால் பாவங்களால் எதிர்க்கப்படாதது என்னும் உட்கருத்துக்கொண்டு இப் பெயரிடப்பட்டது என்றும் கூறுகிறார்கள். ஏனெனில், ஸ்ரீ மகாவிஷ்ணு இந்தப் பட்டணத்தில் ஸ்ரீராமபிரானாக அவதரித்து, மூவுலகங்களுக்கும் ஏற்பட்ட இடுக்கண்களை நீக்கி, அந்நகரத்திலுள்ள அனைவர்க்கும் நற்கதி கொடுத்தார் என்று இதற்கு விசேஷ மகிமை சொல்லப்பட்டிருக்கிறது.

3. மதுரை என்பது வடக்கே யமுனை யாற்றங்கரையில் இருப்பது. இப் பெயரின் வெளிப்படையான காரணம், மது என்கிற அசுரனால் கொள்ளப்பட்ட இடம் என்பதாம். அது ஆதியில் காடாயிருந்த போது மது என்னும் ஓரசுரன் அங்கே பரமசிவனை நோக்கித் தவஞ்செய்து, ஒரு சூலாயுதம் பெற்று மேன்மையாய் வாழ்ந்திருந்தான். அவன் குமாரனான லவணாசுரன் என்பவன் அவ்விடத்திலேயே இருந்து முனிவர்க்குத் துன்பஞ் செய்து வந்ததனால் ஸ்ரீ ராமருடைய

தம்பியான சத்துருக்னன் அங்குச் சென்று அவனைக் கொன்று முனிவர்கட்கெல்லாம் நன்மைசெய்து, அம் முனிவர்களுடைய வேண்டுகோளின்படி அவ்வனத்தை அழித்து நகரமாக்கி, மதுரை என்று பேரிட்டான். உட்கருத்து இன்பத்தைத் தருவது என்பது. இன்பமாவது மோக்ஷானந்தம் என்னும் பேரின்பம். இது மகர்ஷிகள் அனுக்கிரகித்தது. அன்றியும் கிருஷ்ண பகவான் அங்கே அவதரித்து உலகங்களுக்கு மகா க்ஷேமத்தைச் செய்தனர். இந்தக் காரணங்களால் அது விசேஷமகிமை பெற்றது.

4 மாயை என்பது ஹரித்துவாரம் என்கிற மகா க்ஷேத்திரம். ஹரியை அடையும் வழி என்பது அதன் பொருள். ஹரியின் மாயையாலே உண்டாக்கப்பட்டதாகையால் மாயை எனப் பெயர் பெற்றது. ஆதி காலத்தில் மகா சகதியுள்ளவனு யிருந்த மது என்னும் அசுரனைச் சங்கரித்ததனுல் மதுசூதனன் என்கிற திருநாமத்தை அடைந்த விஷ்ணு, அந்த ஸ்தலத்தில் சான்னித்தியஞ் செய்திருக்கிருர். அந்த அசுரன் மரண காலத்தில் இவரை லோககர்த்தர் என்றறிந்து, இந்த இடம் மகாபுண்ணிய க்ஷேத்திரம் ஆகவேண்டும் என்று பிரார்த்திக்க, திருமால் அப்படியே ஆகட்டும் என்று அங்கீகரித்துப் பட்டணம் உண்டாக்கி, அதில் தாம் எழுந்தருளி, அங்கு உள்ளார்க்கெல்லாம் ஞானத்தைப் போதித்துக் கடைத்தேற்றினர். அதனுல் அது மிகுந்த பெருமை பெற்றது. அங்கேதான் கங்காநதி முதலில் பூமியில் பிரவேசிக்கின்றது.

5. காசி என்பதற்குப் பிரகாசிப்பது என்பது பொருள். பிரகாசமாவது வெளித்தோற்றமே யல்ல,

ஞானப்பிரகாசமும் ஆம். அங்கே பரமசிவன் விசேஷ சான்னித்தியஞ் செய்து இயற்கையில் பரிசுத்தமான கங்கைக்கு இன்றும் விசேஷ மகிமையைக் கொடுத்து, அங்கு மரணம் அடைகிறவர்களுக்கு அத் தருணத்தில் தாரகமந்திரத்தை உபதேசித்து முத்திதருகிறார் என்பதனால், அது விசேஷ மகிமையும் கீர்த்தியும் பெற்றது. இதன் பெருமை இன்னும் விஸ்தாரமானது. அன்றியும் அங்கே விசாலாக்ஷி என்னும் அம்மையினுடைய பீடமும் ஸ்தாபிக்கப்பட் டிருக்கிறது. அதனால் அநேக இஷ்ட சித்திகளும் பக்தர்களுக்கு உண்டு என்பர்.

6. காஞ்சி என்பது காஞ்சீபுரம். பிரமதேவன் ஸ்ரீ மகாவிஷ்ணுவைப் பூசித்த இடம் என்பது அதன் பொருள். அங்கே பிரமதேவன் ஒரு யாகம் செய்து விஷ்ணுவைப் பிரத்தியக்ஷமாகக் கண்டார். அப்படிப் பிரத்தியக்ஷமானவர்தாம் வரதராஜ சுவாமி. அந்த நகரம் வேகவதி என்னும் ஒரு சிற்றாற்றங்கரையில் பிரமதேவனால் நிருமிக்கப்பட்டது. அதில் சிவபிரானும், 'அந்தர் வாகினி' அதாவது உள்ளோட்ட முள்ள கம்பா என்கிற ஒரு நதியில் ஒற்றை மாமரத்தடியில் விசேஷ சான்னித்தியஞ் செய்து ஞானோபதேசம் செய்தார். இவர்தாம் ஏகாம்பரநாதர். அந் நகரமத்தியில் மகாமகிமைபெற்ற சிவசக்தி பீடங்களுள் ஒன்றாகிய காமகோடி பீடம் என்னும் ஓர் ஆஸ்தானம் உண்டு. அந்தக் காம கோடி பீடத்தில் காமாக்ஷியம்மை சிறப்புற்றிருக்கிறார். இக் காரணங்களால் அந்நகரம், 'முத்திதரு நகரேழில் முக்கியமாங் கச்சி' என்று பெரியோரால் கொண்டாடப்பட்டது. காஞ்சியில் இன்னும் அநேக விஷ்ணு ஸ்தலங்களும் சிவஸ்தலங்களும் உண்டு. அதனால் எங்குப் பார்த்தாலும் அந் நகரம் கோபுரம்,

பிராகாரம், மண்டபம், மடம் முதலான நாகரிகக் கட்டடங்களும், கற்கட்டுக் குளங்களும், தோட்டங்களும் தோன்றி அழகான காட்சியுடன் விளங்கும். சிற்பத்தில் தேர்ச்சிபெற்ற அந்நிய தேசத்தாரில் இந் நகரத்து மண்டப முதலானவைகளின் சிற்பத்திறத்தைக் கண்டு வியக்காதவர் இல்லை.

7. அவந்தி என்றால் காப்பாற்றுவது; பாவத்தினின்றும் ரக்ஷிப்பது என்பதாம். இதுதான் மாளவதேசத்துப் பிரதான நகராகிய உச்சயினி; மிகவும் ஜயங்கொண்டது என்பது இதன் பொருள். பாவங்களுக்குத் தோற்காமல் ஜயிப்பது என்கிற கருத்தே அவந்தி என்கிற சொல்லின் கருத்தாகிறது. இதில் மகாகாளேசுவரன் என்னும் திருநாமத்தினால் சிவபிரான் பிரசன்னராயிருக்கிறார். கயிலாசத்தில் தம்மை அடைந்தவர்களுக்கு அருள் செய்வது போலவே இங்கும் தம்மைச் சரணமடைந்தவர்களுக்கு அவர் இதம் அருள்செய்துகொண் டிருக்கிறார் என்கிறார்கள். அன்றியும் இங்கே ஒரு மகாகாளி இருந்து வேண்டிய வரங்களை அருளுகின்றாள். இப்படி இந்த நகரின் மகிமைக்கும் பல முகாந்தரங்கள் உண்டு. அங்கே விக்கிரமார்க்கன் முதலான மன்னர்கள் அரசாண்டு வந்தார்கள்.

8. துவாரகை என்பது மேல்கடற்கரையில் உள்ளது. இது கிருஷ்ணபகவானால் நிருமாணஞ் செய்யப்பட்டது. சத்துருக்கள் மோசமாய் உள்ளே புகாதிருக்கும்படி அநேக வாசல்கள் வைத்து, அங்கங்கே தக்க மேன்மையான காவல்களும் வைக்கப்பட்டிருந்ததனால், துவாரகா அல்லது துவாரதீ (வாயில்கள்

உள்ளது) என்னும் நாமதேயம் உண்டாயிற்று. பகவானை அடையக் கூடிய பல வாசல்களுக்குக் காரணமானது என்று உட்கருத்துக் கொள்ளப்படும். கண்ணபிரான் ஜராசந்தனோடு பலமுறை யுத்தஞ்செய்த போது, மதுரையைக் கொளுத்திவிடும்படி அந்தப் பகைவன் செய்த முயற்சியை அறிந்து, அவன் படைகளை தீயில் மாண்டுபோம்படி தந்திரமாய்க் கொளுத்தி விட்டு, இந்நகரத்தை உண்டு பண்ணினர். இதில் அவர் இருந்து துஷ்ட நிக்கிரகமும் சிஷ்டபரிபாலனமும் செய்து மூவுலகத்துக்கும் இதஞ் செய்தார். அன்றியும் அவர் கீதை என்னும் சாஸ்திரத்தினல் வேதாந்தங்களின் சாரமான சகல அர்த்தங்களையும் வெளியிட்டார். 'பத்துடை யடியர்க்கு எளியவன் பிறர்தமக் கரிய வித்தகன்' எனப் பெரியோர் அருளிச் செய்தபடி, தம் அடியாராகிய பாண்டவர்களுக்காகத் தூது நடந்தும் தேர் நடத்தியும், பாண்டவதூதன், பார்த்தசாரதி என்னும் நாமங்களை மேன்மையாகக் கொண்டார். இப்படிப்பட்ட காரணங்கள்தாம் இந்த நகருக்கு விசேஷ மகிமையைத் தந்தன.

9. இதுவும் மதுரையும் அயோத்தியும் முன்னிருந்த நிலைகள் அழிந்துபோய் இப்போது வேறுவகையா யிருக்கின்றன. மாயையும் ஏறக்குறைய அப்படியே என்கிறார்கள்.

## 11. தாய் பிள்ளையைத் துயில் எழுப்புதல்

காரிருள் போயது காலையும் போந்தது
காக்கைகண் விழித்துடன் கரைவதும் காணாய்
பாரெலாம் பச்சைமேல் பதித்தமுத் தெனவே
பனித்துளி தங்கிய பசுந்தரை காணாய்
சூரியன் தன்கதிர்க் கைகளை நீட்டித்
தூங்கிடும் உயிர்களைத் தூண்டுதல் காணாய்
ஏரமர் பஞ்சணை இன்றுயில் நீத்தே
என்னருஞ் செல்வமே எழுந்திடு வாயே. (1)

தினகரன் தோன்றிடும் செவ்வியை உணர்ந்தே
சேவல்கள் கூவின சிறைகளை யடித்தே
மனமது தெளிவுற வானம் நிர்மலமாய்
வாயுவும் தண்ணென வயங்குதல் காணாய்
புனமலர்ச் சோலைகள் புதுமலர் உகுத்தே
பொங்கிய நறுமணம் வீசுதல் காணாய்
இனமுறும் பஞ்சணை இன்றுயில் நீத்தே
என்னருஞ் செல்வமே எழுந்திடு வாயே. (2)

கன்றுடன் காலிகள் கண்விழித் தெழுந்த
காருடல் மள்ளர்கள் கலப்பைகள் எடுத்தார்
தன்றுணை யுடனெழப் புள்ளினம் எழுந்த
தருக்களும் தழைவிரித் தெழுவன காணாய்
சென்றுசென் றுழைத்திடும் தேனினம் எவையும்
திகழ்மலர் தொறுமிரை தேடுதல் காணாய்
இன்றுயில் கொள்ளுவ தின்னமும் அழகோ
என்னருஞ் செல்வமே எழுந்திடு வாயே. (3)

கருத்தை விளக்கிடக் காலையே காலம்
　　கலைகள் பயின்றிடக் காலையே காலம்
வருத்தி யுழைத்திடக் காலையே காலம்
　　வலிவுறப் பயிலவும் காலையே காலம்
அருத்தியோ டிறைவனை அகமுறத் துதித்தே
　　அருச்சனை புரியவும் காலையே காலம்
இருத்திய பஞ்சணை இன்றுயில் நீத்தே
　　என்னருஞ் செல்வமே எழுந்திடு வாயே. (4)

## 12. காற்று உண்டாவது எப்படி?

காற்றானது தன் இஷ்டப்படி மாறிமாறி வீசுகின்றது எனவும், அதற்குக் காரணம் இன்னதென்று கண்டறியக்கூடவில்லை எனவும், அஃது ஒரு விதிக்கும் கட்டுப்பட்டது அன்று எனவும் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே மாந்தர் கருதியிருந்தனர். கொஞ்ச காலத்திற்கு முன்வரையில், வாயுமண்டலத்தின் அசைவாகிய காற்றைப்பற்றி அவ்விதமான கொள்கையே எங்கும் பரவியிருந்தது. இந்தப் பிரகிருதியில் உள்ள எல்லாப் பொருள்களும் இயற்கையா யமைந்த ஓர் ஒழுங்கின்படி நடக்கின்றனவே யொழிய, ஒன்றும் ஒழுங்கு தப்பி நடப்பதில்லை யென்னும் தத்துவம் கண்டுபிடிக்கப்பட்ட பின்னரும், பலகாலம்வரையில் அப்படி ஒழுங்கு தப்பி நடப்பதற்குக் காற்றையே ஏற்றதோர் உதாரணமாகக் காட்டிக்கொண்டு வந்தனர். அப்படியிருக்கப் பிரகிருதி தத்துவங்களைப் பலநாள் ஊக்கமாய்ப் பாடுபட்டுப் பரிசோதனை செய்த பிறகு, உண்மை கண்டறியலாயிற்று. இப் பூமியின்மீது உலவுகின்ற காற்றானது, ஒருவிதமான தெய்வ சங்கற்பத்துக்கு

உட்பட்டே நடக்கின்றது; பூமி சூரியமண்டலத்தைச் சுற்றி ஆகாயத்தில் ஓடுவது எப்படி ஒரு நியதிக்குக் கட்டுண்டிருக்கிறதோ, அப்படியே காற்றும் அதற்சேற்ற ஒரு நியாயத்திற்குக் கட்டுப்பட்டே இப் பூமியின்மீது உலவுகின்றது எனத் தேர்ந்து தெளியலாயிற்று.

2. எல்லாப் புறங்களிலும் இப்பூமியைச் சூழ்ந்துகொண்டு, பூமிக்குமேலே போகப் போகக் கனத்தில் குறைந்து இலேசாகி, அநேக மைல் உயரம் ஆகாயத்தில் பரந்திருக்கின்ற வாயுமண்டலமானது பிராணவாயு உப்புவாயு என்னும் இரண்டு பிரதானமான வாயுக்களின் சேர்க்கையால் அமைந்ததென்பதை நாம் அறிவோம். இவ்விரண்டு வாயுக்களும் வாயுமண்டலத்தில் எப்போதும் ஒரே அளவாய் இருக்கின்றனவேயொழிய ஒருபோதும் மாறுபடுவதில்லை. அவை இரண்டுமாத்திரமேயன்றி, வாயுமண்டலத்தில் சேர்ந்திருப்பது மற்றொன்றும் உண்டு. அதன் அளவுமாத்திரம் வாயுமண்டலத்தில் பெரும்பாலும் மாறுபடுகின்றது. அது பூமியின் வெவ்வேறு பாகங்களில் வெவ்வேறு அளவாக மாறி யிருப்பதுமன்றி, ஒரே இடத்திலும், காலபேதத்தால், வெவ்வேறு அளவாக மாறுபடுகின்றது ; அதற்கு நீராவி யென்று பெயர். இந்த நீராவியை வாயுமண்டலமானது இப் பூமண்டலத்திலுள்ள பல வகையான நீர் நிலைகளினின்றும் கிரகித்துக் கொள்கின்றது. அப்படிக் கிரகிப்பதற்கு நீர் சுவறுதல் என்று பெயர். இப் பூமியில் உள்ள நீர் நிலைகள் பலவற்றுள்ளும் மிகப்பெரியது சமுத்திரம். ஆதலால் வாயுமண்டலம் சமுத்திரத்தினின்றுமே நீராவியை விசேஷமாகக் கிரகித்துக் கொள்கின்றது.

3. இந்த நீராவியை எவரும் காணமுடியாது என்பதையும் நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். வாயுமண்டலத்திலுள்ள உப்புவாயு பிராணவாயு ஆகிய இவைகளை நாம் எப்படிக் காணமுடியாதோ அப்படியே நீராவியையும் காணமுடியாது. ஆனால், சில காரணங்களினால் ஒவ்வொரு சமயங்களில் அந்த நீராவி உறைந்து, ஆகாயத்தில் மேகங்களாகக் காணப்படும். அந்த மேகங்கள் பெரும்பாலும் மலைமேலும், சிறுபான்மை தரையிலும் வந்து இறங்குவதுண்டு. அப்படி இறங்கும்போது அதற்குப் பனி அல்லது மூடுபனியெனப் பெயராகும். மழைக் காலங்களில் விசேஷமாக மழை பொழியவும், பனிக்காலத்தில் விசேஷமாய்ப் பனிபெய்து வீடு வாயில் மரம் செடி முதலிய எல்லாம் நனைந்து இருக்கவும் காண்கின்றோம். வாயு மண்டலத்திலுள்ள நீராவி அப்படி இறுகித்தான் மறுபடியும நீராகித் தரையில் விழுகின்றது. இராத்திரி பெய்த பனி யெல்லாம், காலையில் சூரியன் உதயமாகி வாயுமண்டலம் முன்னிருந்ததைப் பார்க்கிலும் சிறிது அதிகமாகச் சூடுகொண்டவுடனே, உலர்ந்து போகின்றது என்பது யாவர்க்கும் நன்குதெரிந்த விஷயம். இதனால், வாயுமண்டலம் எவ்வளவு அதிக உஷ்ணமாயிருக்கின்றதோ அவ்வளவு அதிகமாக நீரை ஆவியாகக் கிரகித்துக் கொள்ளுகின்றது என்பது நமக்குத் தெளிவாய்த் தெரிகின்றது.

4. காற்று உன்டாவதற்குக் காரணத்தைக்கண்டுகொள்ள நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய மற்றொரு விஷயம் உண்டு; அதாவது, இப்பூமியின் சில பாகங்கள், மற்றப் பாகங்களைப் பார்க்கிலும், சூரி-

யனிடத்திலின்றும் மிகவும் அதிகமாக உஷ்ணத்தைப் பெறுகின்றன என்னும் உண்மையாம்.

5. பூமத்திய ரேகைக்கு இருபுறங்களிலும் $23\frac{1}{2}$ பாகம் பரந்து, அதி உஷ்ணமண்டலம் என்று வழங்கும் பூபாகத்திற்குள் ஏதாவது ஓர் இடத்தில் உச்சிக்கு நேராக வருஷம் முந்நூற்றறுபது நாளும் சூரியன் காய்கிறதென்பது நமக்கு நன்ருய்த் தெரியும். பூமியின் மற்றப் பாகங்களைப் பார்க்கிலும் அந்தப் பாகத்தில் உஷ்ணம் அதிகமாய் உறைப்பதனுலேயே அதற்கு உஷ்ணமண்டலம் என்னும் பெயர் வழங்குகின்றது. அங்கிருந்து வடக்கேயாவது தெற்கேயாவது போகப் போக, சூரியன் முன்போல உச்சிக்கு நேரா யிராமல், கொஞ்சங் கொஞ்சமாய் ஒரு புறத்தில் சாய்கின்றது; அவ்வண்ணமே சூரியனுடைய உஷ்ணத்தின் அளவும் குறைந்துகொண்டே போகின்றது.

6. மேலும், சாதாரண வாயுவாகட்டும், விசேஷ வாயுக்களாகட்டும் சூடாக்கப்பட்டபோது, அவை நெருங்கியிருப்பதைவிட்டு விலகி, அதிகமான இடத்தில் பரவ ஆரம்பிக்கின்றது. ஆனதுபற்றி முன் இருந்ததைப் பார்க்கிலும் சூடுகொண்ட வாயு இலேசாகி, இரண்டு பொருள்களினிடையில் இடுக்குண்ட ஒரு பொருள்போல, உயர எழத் தொடங்குகின்றது. இதற்குச் சிறிய திருஷ்டாந்தம் ஒன்று பாருங்கள்: எரிகிற ஒருவிளக்கின் புகைபோக்கிக்கு நேர்மேலாகச் சிறிய கடிதத் துண்டுகளையாவது, அரப்பொடிகளையாவது கீழேவிழும்படி போடுவோமானல், அவைநேராக்கீழே விழுவதில்லை; உயர எழுகின்றகாற்றின்வேகத்தில் அகப்பட்டுக் கொண்டு, அதனல் சிறிது தூரம்

உயரக்கொண்டு போகப்பட்டு, உயரப்போகப் போகப் பக்கத்தில் விலகி, புகைபோக்கியின் பக்கமாகக் கீழே விழுகின்றன. அவ்விடத்தில் வாயு அவ்வண்ணம் உயர எழுவதற்குக் காரணம் என்னவெனில், விளக்கின் அடிப்புறத்தினின்று செல்லும் குளிர்ச்சியான காற்று, அவ்விளக்கின் சுவாலையினல் வெப்பங்கொண்டு பரவி இலேசாவதனுல் உயர எழுகின்றது. அஃது உயர எழ எழ, அதற்குப்பதிலாக அங்கே பக்கங்களில் உள்ள குளிர்ச்சியான காற்றுப்போய் அடைய, அதுவும் முன்போலவே உயர எழுகின்றது.

7. மேலும், நாம் இப்போது மற்றொரு விஷயமும் அறிந்துகொள்ள வேண்டுவது அவசியம். சூரியன் நீரிலும் நிலத்திலும் ஒரே அளவாகக் காய்ந்தாலும், அவற்றில் அதனுல் உண்டாகும் செய்கைமட்டும் வித்தியாசமா யிருக்கின்றது; அதாவது — நீரைப்பார்க்கிலும் நிலம் அதிக உஷ்ணமாக்கப்படுகின்றது. அஃது எல்லோருக்கும் தெளிவாய்த் தெரிந்த விஷயமே. நன்றாய் வெயில் காய்கின்ற ஒரு நாளில், ஆறு குளம் ஏரி முதலிய ஏதாவதொன்றில் கையையாவது காலையாவது நனைத்துப் பார்த்தால், இவ் விஷயம் நமக்கே நன்றாய் விளங்கும். அக்காலத்தில் நாம் நடக்கும்போது தரை நம்முடைய கால்களைக் கொளுத்தும்படியா யிருக்க, குளத்துத் தண்ணீர் ஆரோக்கியமான குளிர்ச்சி யுடையதாய் இருப்பதைக் காண்போம். ஆனல், இதன் காரணத்தைக் கண்டுகொள்வதுமட்டும் அவ்வளவு சுலபமானது அன்று; நீரும் நிலமும் ஒரேயளவான சூட்டைப் பெறவேண்டுமானல், அப்போது அதற்காக நீருக்கு எவ்வளவு சூடு வேண்டுமோ அவ்வளவு நிலத்திற்கு வேண்டுவதில்லை.

அதனல், நிலமும் நீரும் சூரியனிடத்தினின்று ஒரே அளவான வெப்பத்தைப் பெற்றாலும், நீரைப்பார்க்கிலும் நிலம் அதிக உஷ்ணத்தை யடைகின்றது. சூரியனிடத்தினின்று உஷ்ண முண்டாவது தடுக்கப்படுமானல், அதாவது சூரியன் அஸ்தமித்துப் போன பிறகு, இதற்கு விரோதமான செய்கை ஆரம்பிக்கின்றது. அதாவது, தரையும் தான் கொண்ட சூட்டை விட்டுவிட ஆரம்பிக்க, நீரைக் காட்டிலும் நிலம் அதி சீக்கிரத்தில் சூடாறிக்குளிர்ந்துபோகின்றது. மேலும், தண்ணீர் அடையும் வெப்பமெல்லாம் நீரை உஷ்ணமாக்குவதற்கே உபயோகப்படுவதில்லை; நீரை ஆவியாக்குவதற்கே அநேகமாய் உபயோகப்படுகின்றது. இவைகளே நிலத்தைப்போல நீர் அவ்வளவு உஷ்ணமாகாதிருப்பதற்குக் காரணங்களாம்.

8. மேலும், சூரிய கிரணங்கள் சூரியமண்டலத்திலிருந்து வரும் வழியிலுள்ள வாயுக்களைச் சூடாக்கிக்கொண்டே இப்பூமிக்கு வருகின்றன என நாம் ஒருபோதும் எண்ணலாகாது. அப்படியாயின், சூரிய மண்டலத்திற்குச் சமீபத்திலிருக்கிற வாயுமண்டலத்தின் மேற்பாகங்கள் அதிக உஷ்ணமாகவும், கீழே இறங்க இறங்க உஷ்ணம் குறைவாகவும் அல்லவோ இருக்கவேண்டும்? ஆயினும், நமது அனுபவத்தில் அப்படிக் காணவில்லை. நாம் இப்பூமியிலிருந்து உயர ஏற ஏற, வாயு அதிக குளிர்ச்சியா யிருக்கின்றது என்பது எல்லோர்க்கும் தெளிவாய்த் தெரிந்திருக்கின்றது.

9. ஆதலால், சூரிய கிரணங்கள், சூரிய மண்டலத்திலிருந்து வரும்போது வழியிலுள்ள வாயுமண்ட-

லத்தைச் சிறிதும் சூடாக்காமல், நேராகவே இப் பூமியில் வந்து சேர்கின்றது. அப்படி வரும் சூரிய கிரணங்களின் உஷ்ணமெல்லாம் இப்பூமியில் அடைவதனால் பூமி அதிக உஷ்ணமாகும்; மறுபடி அந்த உஷ்ணம் பூமியிலிருந்து மேலெழுவதனால், பூமியை அடுத்துள்ள வாயு அதிக சூடுகொள்ள, அந்தச் சூடு வாயு மண்டலத்தில் பரவுகின்றது. உயரத்திலுள்ள வாயுவைப் பார்க்கிலும் பூமியை அடுத்துள்ள வாயு அதிக உஷ்ணமாயிருப்பதற்குக் காரணம் இதுவேயாம்.

10. இவ் விஷயங்களை எல்லாம் நாம் இப்போது நன்றாக அறிந்துகொண்டோம்; இனி, நாம் காற்று என்று வழங்கும் வாயுமண்டலத்தின் அசைவு எவ்வண்ணம் உண்டாகின்றது என்பதைப்பற்றிச் சிறிது விசாரிப்போம்:

11. சூடுகொண்ட காற்று குளிர்ந்த காற்றைப் பார்க்கிலும் இலேசானதாகையால், அது மேலே எழ முயல்கின்றது என்று முன்னே சொன்னோம்; பெருநெருப்புப்பற்றி யெரியும்பொழுது இவ் விஷயத்தைத் தெளிவாகக் காணலாம். அப்போது வாயு மண்டலம் அசைவற்று இருந்தாலும், எரிகிற தீயின் புகை உயரஎழும், அந்தப்புகை அப்படி உயர எழும்போது, அங்குள்ள செத்தை சருகு முதலிய இலேசான பொருள்களைத் தன்னுடன் தூக்கிக்கொண்டு போவது நமக்குப் பிரத்தியட்சமாகத் தெரியும். அப்படிப் பற்றி யெரிகிற தீ, ஒருகாடு பற்றி யெரிவதுபோன்ற பெருந்தீயாய் இருக்குமாயின், அப்போது வாயு நாலா பக்கங்களினின்றும் அவ்விடத்தை நோக்கி ஓடி வருகின்றது. அமெரிக்கா கண்டத்து ஐக்கிய மாகா-

ணத்திலுள்ள ஒரு நகரம் சில வருஷங்களுக்குமுன் தீக்கொண்டு அமோகமாய் எரிந்தபோது, அதனால் உண்டாகிய காற்று அவ்வெரி நகரத்தை நோக்கிப் பலதிக்குக்களிலும் இருந்து அதிக வேகமாய் வீசத்-தொடங்கிற்றாம்.

12 இவ் வண்ணமான செய்கைகளே உலகில் சூரியவெப்பத்தினால் உண்டாக்கப்படுகின்றன. தீயின் வெப்பத்தினால் வாயு எவ்வளவு அதிகமாகச் சூடாக்-கப்படுகின்றதோ அவ்வளவு அதிகமாகச் சூரிய கிர-ணங்களால் ஆவதில்லை என்பது மெய்தான். ஆயினும், சூரியன் உச்சிக்கு நேராக நின்று காயும் உஷ்ணமண்-டலம் இப பூமியில் அதிக விஸ்தீரணமானது; ஆகை-யால், அப்பாகம் முழுமையும் ஏககாலத்தில் சூடாக்-கப்படுகிறபோது அங்குள்ள வாயு அவ்வளவும் சூடாகி உயர எழுவதனால், அதற்குப் பதிலாக வடக்கிலும் தெற்கிலும் உள்ள குளிர்ச்சியான வாயு அதிக வேக-மாய் அவ்விடத்தை நோக்கி ஓடுகின்றது. அவ்வண்-ணம் அசைந்து ஓடுகிற வாயுவைத்தான் நாம் காற்று என்று கூறுகின்றோம். இப்படித் தென்முகமாகவும் வட முகமாகவும் ஓடுகின்ற காற்று கடற்கரை முதலிய இடங்களில், அவ்வவ் விடங்களிலுள்ள சீதோஷ்ணங்-களின் தாரதம்மியத்தினால் மாறுபட்டு வெவ்வேறு முகமாகவும் வீச ஆரம்பிக்கின்றது. கடலோரத்தி-லுள்ள நாடுகளில் பொழுதுபோனால் கடற்காற்றும், இராத்திரி நெடுநேரத்துக்குப் பிறகு தரைக்காற்றும் வீசுவது வழக்கம். இதற்கும் காரணம் நீரும் நிலமும் மாறி மாறிச் சூடுகொள்வதேயாகும்.

## 13. சென்னை நகரில் உள்ள ஸெண்ட் ஜார்ஜ் கோட்டை

'நண்பா, அங்கிலேயர் முதலில் சென்னையில் வர்த்தக ஸ்தானம் கட்டினார்கள் என்று சொல்லினையே, அஃது எங்கே இருக்கிறது? இப்போது எப்படி இருக்கிறது?' என்று தன் நண்பனைக் கேட்டான் முத்து.

2. 'முத்து, அந்த இடத்தை நீ நேரில் வந்து பார்க்கவேண்டும். வீட்டிலிருந்துகொண்டு பேசினால் ஏதும் நன்கு விளங்காது. நீ என்னோடு வா; உன்னை நான் அங்கே அழைத்துக்கொண்டு போகின்றேன். ஒவ்வொன்றையும் நேரில் பார்த்துத் தெரிந்துகொள்' என்று சொல்லி, நண்பனைத் தன்னோடு அழைத்துக் கொண்டு கோட்டைக்குட் சென்றான் சங்கரன்.

3. 'நண்ப, இதுதான் அங்கிலேயர் இங்கே முதல் முதல் கட்டிய வர்த்தக ஸ்தானம். இதற்கு ஸெண்ட் ஜார்ஜ் கோட்டை என்பது பெயர். அங்கிலேயர் இதைக் கட்ட நேர்ந்த காரணத்தையும், இதற்கு இப் பெயரை வைக்க நேர்ந்த காரணத்தையும் விளக்க-மாகச் சொல்லுகிறேன், கேள்:

4. 'காப்டன் ஹிப்பன் என்பவர் முதல் முதல் 1611ஆம் ஆகஸ்ட்டுமீ 20உ கிருஷ்ணா ஜில்லாவில் நிஜாம் பட்டணத்தில் வந்து இறங்கினார். அப்போது அந் நகருக்குப் பேட்டைப்பள்ளி என்று பெயராம். ஹிப்பன் என்பவர், சிலரை அந்த நிஜாம்பட்டணத்தில் இறக்கிவிட்டு, வர்த்தகம் நடத்திக்கொண்டே மசுலிப் பட்டணத்தை யடைந்தார். அங்கே வர்த்தகம் நன்கு நடைபெற்றது. அதனால் அங்கே ஒரு வர்த்தக ஸ்தா-



1698 — 1709 வருஷத்தில் சென்னைக் கோட்டை யிருந்த மாதிரி

னம் ஏற்படுத்தினர். அதுவே பிறகு அங்கிலேயருக்-குத் தென்இந்தியாவில் பலத்த வர்த்தக ஸ்தானமாக ஏற்பட்டது. பின்னரும் அங்கே நல்ல வர்த்தகம் நடைபெற்றது. அதனால் அங்கிலேயர் கீழ்க்கரை நாடுகளில் பின்னும் அநேக வர்த்தகஸ்தானங்கள் கட்-டத் தொடங்கினர்.

5. 'அப்போது டச்சுக்காரர் பழவேற்காட்டில் ஒரு வர்த்தகசாலை கட்டி, வர்த்தகம் நடத்தி வந்தனர். அதற்கு 40 மைல் தூரத்திலுள்ள ஆர்மகான் என்னு-மிடத்தில் அங்கிலேயர் ஒரு வர்த்தக ஸ்தானம் ஏற்-படுத்தினர். அங்கிலேயருக்கு அங்கே வர்த்தகம் சரி-வர நடைபெறவில்லை. அந்த வர்த்தக ஸ்தானத்திற்-குப் பிரான்ஸிஸ் டே என்பவர் தலைவராக ஏற்பட்-டிருந்தார். ஆமர்கானில் வர்த்தகம் சரிவர நடை பெறாமையால் டே என்பவர், பழவேற்காட்டுக்குத் தெற்கில் ஒரு வர்த்தக ஸ்தானத்தை அமைக்கவேண்-டும் என்று முயற்சி செய்தார். அதற்குத் தக்க இடம் ஏதாவது இருக்கிறதா என்பதை அறியக் கடற்கரை ஓரமாகவே பார்த்துக்கொண்டு வந்தனர்.

6. 'அப்பொழுது மயிலாப்பூருக்குக் கிழக்கில் ஸாந்தோம் என்னுமிடத்தில்' போர்த்துக்கேசியர் நிலைத்து வர்த்தகம் நடத்திக்கொண் டிருந்தனர். அதற்குச் சிறிது வடக்கில் ஒரு வெளியிடம் இருந்தது. அதையடுத்து கரையார் பாளையம் என்னும ஒரு சிறு பாக்கமும் இருந்தது. அந்த இடத்தில் வர்த்தகசாலை கட்ட டே என்பவர் நிச்சயித்தார். அக்காலத்தே போர்த்துக்கேசியர் டச்சுக்காரரோடு விரோதப்பட்-டிருந்தபடியால், அவர்கள் அங்கிலேயருக்கு அனுகூல மாக உதவி புரிந்தனர்.

7. 'அங்கிலேயருக்குச் சென்னையில் வேண்டியதாயிருந்த அந்தவெளியிடம், அப்போது செங்கற்பட்டில் ஆண்டுகொண்டிருந்த தர்மால வேங்கடாத்திரி நாயுடு என்பவருக்குச் சொந்தமானதாக இருந்தது. அதனால், 1639 ஆம் வருஷம் அங்கிலேயர் செங்கற்பட்டு அரசரிடம் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டனர். ஆயினும் செங்கற்பட்டின் அரசர் சந்திரகிரி அரசருக்கு அடங்கினவரா யிருந்தமையால், அங்கிலேயர் சந்திரகிரி அரசனாகிய ஸ்ரீ ரங்கராயலு என்பவரிடத்தும் அனுமதி பெறவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஸ்ரீ ரங்கராயலு என்பவர் அங்கிலேயர் செய்துகொண்ட விண்ணப்பத்திற்கு இணங்கி, வர்த்தகசாலை கட்டிக்கொள்ள அனுமதி கொடுத்து, அங்கு ஏற்படும் பட்டணத்திற்கு ஸ்ரீ ரங்கராய பட்டணம் என்று பெயரிடவேண்டும் என்று ஏற்பாடுசெய்தனர். இதற்குள் மகம்மதியர்கள் சந்திரகிரியின்மேல் படையெடுத்துவர, ஸ்ரீ ரங்கராயலு அந்தச் சண்டையில் தப்பினால்போதும் என்று ஓடி மைசூர் ராஜ்யத்தில் மறைந்துகொண்டார். பிறகு, அங்கிலேயர் சென்னையில் தாம் எண்ணிய இடத்தில் ஒரு சிறு கோட்டை கட்டிக்கொண்டு வர்த்தகம நடத்தினர். அப்போது இங்கே சுற்றிலும் ஜனங்கள் வந்து குடியேறினதனால் ஒரு பட்டணம் ஏற்பட்டது. அதற்கு செங்கற்பட்டு அரசர் விரும்பியபடியே அவரது தகப்பனார் பெயரால் சென்ன பட்டணம் என்று அங்கிலேயர் பெயரிட்டனர்.

8. 'நண்ப, காலமும் இடமும் மாறிக்கொண்டே வரும். நம்முடைய காலத்தில் எவ்வளவு மாறுதல்கள் உண்டாகின்றன, உனக்குத் தெரியாதா? அங்கிலேயர் செங்கற்பட்டு அரசனிடம் பெறறுக்கொண்ட பூமி

கொஞ்சந்தான். அவர்கள் வர்த்தக ஸ்தானத்திற்கு வேண்டிய அளவே முதலில் பெற்றுக் கொண்டனர். மயிலாப்பூருக்கு வடக்கில் கடற்கரை யோரமாக நான்கு மைல் நீளமும். கிழக்கு மேற்கில் ஒரு மைல் அகலமும் உள்ள பூமியைப் பெற்றுக்கொண்டனர். அப்போது இந்தப் பாகம் ஒரு தீவைப்போலிருந்தது. கோட்டைக்குத் தெற்குப் புறத்தில் கூவம் ஆறும், வடக்கில் வடவாறும் சூழ்ந்திருந்தன; அவற்றிற்கு இடையில் கடற்கரையை அடுத்து, வடக்குத் தெற்கில் 400 அடி நீளமும், கிழக்கு மேற்கில் 200 அடி அகலமுங்கொண்ட கோட்டை ஒன்றைக் கட்டினார்கள். அதற்குள் வெள்ளைக்காரர் மாத்திரமே வசித்திருந்தனர். ஆதலால், அதற்கு வொயிட் டவுன் (வெள்ளைக்காரர் பட்டணம்) என்று பெயரிட்டனர். கோட்டைக்கு வடக்கில் ஏற்பட்ட பட்டணத்தில் சுதேசிகள் வசித்திருந்தார்கள். அதை அவ் வெள்ளைக்காரர் பிளாக்ட் டவுன் (கறுப்பு மனிதர் வசிக்கும் பட்டணம்) என்று சொல்லத் தொடங்கினர்.

9. 'வர்த்தகம் செய்யவந்த அங்கிலேயர் நாளடைவில் சில நாடுகளையும் சம்பாதித்தனர்; அதற்காகத் தங்கள் கோட்டைக்குள் ராணுவங்களைச் சேர்க்க ஆரம்பித்தனர். அதனால் இந்தக் கோட்டை வரவரப் பெரிதாயிற்று. இப்போது இந்தக் கோட்டையை வெளியிலிருந்து பார்த்தால் கோட்டை யிருப்பதே தெரியவில்லை சுற்றிலும் மண்மேடு மூடிக்கொண்டிருக்கிறது. அதைச் சூழ்ந்திருக்கும் வெளியிடத்திற்கு கோட்டை வெளி என்று பெயர். கோட்டைக்குள் நுழைந்தால் மதிலைச் சுற்றித் தண்ணீர் சூழ்ந்திருக்கின்றது. இதற்கு அகழி என்று பெயர். பகைவர் மதிலின்மேல்

ஏறி உள்ளே வாராதபடி கோட்டைக்கு அகழியை ஏற்படுத்துவது தொன்றுதொட்டு வரும் வழக்கமாம். அகழியில் முதலை முதலிய ஜந்துக்களையும் விட்டு வளர்ப்பது உண்டு. இந்தக் கோட்டைக் கதவைப் பார்த்தால், இது பகலில் அகழியைக் கடக்கக் கட்டிய ஒரு சிறு பாலத்தைப்போல் இருக்கிறது இரவில் இதைத் தூக்கிக் கட்டிவிட்டால், கோட்டை வாயில் அடைபடும்.

10. 'இனி, கோட்டைக்கு உள்ளேசென்று பார்ப்போம். இதற்குள் அநேக வீதிகள் அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு வீதிக்கும ஒவ்வொரு பெயர் உண்டு. இது கோட்டை என்று குறிப்பதற்கு முக்கியமான அடையாளம் ஒன்று இருக்கிறது. இதோ பார், எவ்வளவு உயரமாகக் காண்கிறது, கோட்டைக் கொடிமரம்; இதன்மேல் கொடிச் சீலை பறக்கிறது. கொடி மரத்திற்கு ஆதாரமாகவும், கொடிச் சீலையை உயர ஏற்றுவதற்கு அனுகூலமாகவும் பல கம்பிகளும் கயிறுகளும் கட்டி, பூமியில் வலிவாய் நாட்டியிருக்கின்றனர். கொடிமரத்திற்கு அருகில் ஒரு கோயில் இருக்கிறது. இதற்கு மேரி ஆலயம் என்று பெயர். இதற்கு அருகில் அநேக உத்தியோகசாலைகள் அமைந்திருக்கின்றன. இவைகளேயன்றி, மற்றொரு முக்கியமான இடமும் இங்கு இருக்கிறது. இதற்குச் சட்ட நிர்மாண சபை என்று பெயர். இங்கே நமது சென்னைக் கவர்னரும், சட்ட நிர்மாண சபையைச் சார்ந்த அங்கத்தினரும் கூடி, நாட்டுக்கு நன்மையான விஷயங்களை ஆலோசித்து, அவ்வப்போது சட்டங்களை ஏற்படுத்துவார்கள். கோட்டையின் மற்றப் பாகங்-

களில் ராணுவ வீரரும், ராணுவ உத்தியோகஸ்தர்களும் வசிக்கின்றார்கள்.

11. 'இக்கோட்டைக்கு ஸேன்ட் ஜார்ஜ் கோட்டை என்பது பெயர்: ஏனெனின், ஸேன்ட் ஜார்ஜ் என்னும் பெரியார் அங்கிலேயருக்குச் சிறந்த அத்தியக்ஷதர்; அதனால் அவர் பெயரே இக்கோட்டைக்குப் பெயராக இடப்பட்டது. இந்தக் கோட்டைக்கு நான்கு வழிகள் உண்டு. ஒன்று மேற்குப் புறமாக இருக்கிறது; அதற்கு ஸேன்ட் ஜார்ஜ் கேட் என்று பெயர். ஒன்று வடக்குப் புறமா யிருக்கிறது; அதற்கு நார்த் கேட் என்று பெயர். ஒன்று தெற்குப் புறமா யிருக்கிறது; அதற்கு வாலாஜா கேட் என்று பெயர். ஒன்று தென் கிழக்குப் புறமா யிருக்கிறது; அதற்கு ஸவுத் ஸீ கேட் என்று பெயர்' என்றான் சங்கரன்.

12. 'நண்ப, நான் இதற்குள் எப்போதும் வந்ததே இல்லை. இஃது இவ்வளவு பெரிய பட்டணம் என்றும் எனக்கு இதுவரையில் தெரியாது. நல்லகாலம் இன்று உன்னோடு வந்தேன்; இதன் சரித்திரத்தை நன்றாய்த் தெரிந்துகொண்டேன்' என்றான் முத்து.

## 14. மீன் சுவாசிக்கும் விதம்

உயிர் வாழ்க்கைக்கு முக்கிய ஆதாரமானது சுத்த வாயு. சுத்த வாயுவை உட்கொள்ளாவிட்டால் எந்தப் பிராணியும் விரைவில் இறந்துபடும். பிராணிகள் சாதாரணமாக மூக்கின் வழியாக வாயுவை உள்ளுக்கு இழுத்து, பிறகு அதை வெளிவிடுகின்றன. வாயுவை இப்படி உட்கொண்டு வெளி விடுவதனால் உண்டாகும் பயன் யாது?

2. முதுகெலும்புள்ள எந்தப் பிராணிக்கும் இருதயத்தி லிருந்து இரத்தவோட்டம் ஆரம்பிக்கிறது. இரத்தம் உடலெங்கும் சுற்றியோடி அங்கங்கேயுள்ள அசுத்தங்களை எல்லாம் திரட்டிக்கொண்டு மறுபடியும் இருதயத்தண்டை வருகின்றது. அப்போது மூக்கின் வழியாகச் செல்லும் சுத்தவாயு இருதயத்திற் சென்று, இரத்தத்தைச் சுத்தி செய்து, அங்கே திரண்டு வந்துள்ள அசுத்தத்தை கொண்டுவந்து வெளியே தள்ளி விடுகிறது. அதனால் பிராணிகள் உட்கொள்ளும் வாயு சுத்தமானதாகவும் வெளிவிடும் வாயு அசுத்தமானதாகவும் இருக்கும் என்பது நிச்சயம். அசுத்தமான வாயுவை உட்கொண்டால் அது சிறுகச்சிறுக மயக்கத்தை உண்டாக்கிப் பிறகு மரணத்திற்கும் இடமுண்டாக்கும்.

3. மீனும் முதுகெலும்புள்ள பிராணியாக இருந்தாலும், அது ஜலத்தில் வசிக்கும் ஜந்துவாக இருப்பதனால், நிலத்தில் வசிக்கும் ஜந்துக்களுக்கும் அதற்கும் பலவகையில் வித்தியாசம் ஏற்பட்டிருப்பதுபோலவே, மூச்சு விடுவதிலும் பேதம் ஏற்பட்டிருக்கிறது. மற்றப் பிராணிகளுக்கெல்லாம் மூக்கு வாசனை யறியவும் மூச்சு விடவும் அமைந்து இருக்கிறது. மீனுக்கோ மூக்கு வாசனை யறிவதற்கு மட்டும் பயன்படுகிறது. மீன் மூக்கினால் மூச்சு விடுவதில்லை. வாயினாலேயே மூச்சு விடுகிறது. மற்ற ஜந்துக்களுக்கும் மீனுக்கும் இந்த வகையில் ஏற்பட்டுள்ள வித்தியாசம் மிகவும் வியக்கத்தக்கது. இனி, மீன் எப்படி வாயின் வழியாக மூச்சு விடுகிறது என்பதை விசாரிப்போம்:

4. சாதாரண வாயுவில் ஜலம் கலந்திருக்கிறது; சாதாரண ஜலத்தில் வாயு இருக்கிறது. இதை எப்ப-

டித் தெரிந்துகொள்வது? ஒரு புட்டியில் கொஞ்சம் பனிக்கட்டியைப் போட்டு இறுக மூடிவிட்டு, அந்தப் புட்டியைச் சாதாரண வாயு வீசும் வெளியிடத்தில் வைத்தால், அப் புட்டியின்மேல் துளித் துளியாகத் தண்ணீர் தங்கியிருக்கும். அந்த நீர்த்துளி எப்படி வந்தது? சாதாரணவாயு குளிர்ச்சியான புட்டியின்மேல் பட்டவுடனே, அந்த வாயுவிலுள்ள உஷ்ணத்தை அப் புட்டியிலுள்ள குளிர்ச்சி கிரகித்துக் கொள்ளும்; கொள்ளவே, அவ் வாயுவில் கலந்திருந்த ஜலம் புட்டியின்மேல் தங்கிற்று. இதனால் சாதாரண வாயுவில் ஜலம் கலந்திருக்கிறது என்பது நமக்குத் தெளிவாக விளங்குகிறதல்லவா?

5. இப்படியே சாதாரண ஜலத்தில் வாயு கலந்திருப்பதையும் பரீக்ஷித்து அறிவோம்: கொஞ்சம் தண்ணீரை ஒரு பாத்திரத்தில் ஊற்றி அடுப்பின்மேல் வைத்துக் காய்ச்சினால், காயுந் தண்ணீரில் சிறு சிறு நீர்க்குமிழிகள் உண்டாகின்றன. இந்த நீர்க் குமிழிகள் எப்படி உண்டாகின்றன? சாதாரண ஜலத்தைக் காய்ச்சும்போது அந்த ஜலத்தில் கலந்திருந்த வாயு வெளிப்படுகின்றது. அது முதலில் நீர்க்குமிழிகளாகத் தண்ணீரின் மேலே வந்து, சூடு ஏற ஏற ஆவியாகி, ஆகாயத்தில் எழுகின்றது. இதனால் சாதாரண ஜலத்தில் வாயு கலந்திருக்கிறது என்பது நமக்குத் தெளிவாகின்றது.

6. இனி, மீன் ஜலத்தில் சுவாசிக்கும் விதத்தைக் கவனிப்போம். தண்ணீரிலுள்ள மீன், நீந்திக்கொண்டிருந்தாலும் நிலைத்திருந்தாலும், மிக்க விரைவாக ஓடி அலுத்துப் பெருமூச்சு வாங்கும் ஒருவனைப்போல், சதா வாயைத் திறந்து திறந்து தண்ணீரை உள்ளே

கொள்ளுகின்றது. இப்படி உட்கொள்ளும் தண்ணீரை, மீன் விழுங்கி விடுகிறதா? இல்லையே. பின்னை அஃது என்ன செய்கிறது? மீன் தன் வாயின்வழியாக உட்கொள்ளும் நீரை, தனக்கு இரண்டு புறங்களிலும் உள்ள செவுள்களின் வழியாக வெளியே தள்ளிவிடுகிறது. அது தண்ணீரை வெளியே தள்ளிவிட்டாலும், அந்தத் தண்ணீரோடு கலந்திருந்த வாயுவை, அதன் செவுளிலுள்ள சிறிய இரத்த நாளங்கள் வேறு பிரித்துக் கிரகித்துக்கொள்ளுகின்றன. இதனல் மீனின்



இரத்தம் சுத்தமடைவதோடு, அதிலுள்ள அசுத்தமும் வெளியே வந்துவிடுகின்றது. ஜலத்தில் கலந்துள்ள வாயுவை வேறு பிரித்துக் கிரகித்துக்கொள்ளும் சக்தி மீன் வகைகளுக்கு மாத்திரமே அற்புதமாக அமைந்திருக்கின்றது. ஜலத்தில் சஞ்சரித்தாலும், ஜலத்திலுள்ள வாயுவை இப்படி வேறுபிரிக்க முடியாத இதர ஜந்துக்களை மீனினத்தில் சேர்க்க முடியாது. திமிங்கிலம் தண்ணீரில் வசிக்குஞ் ஜந்துவாளுலும், அது மீனினத்தைச் சார்ந்ததன்று என்பதற்கு இதுவே ஒரு சிறந்த சாட்சியாகும்.

7. மீன் தண்ணீரிலுள்ள வாயுவைப் எப்படிப் பிரித்து எடுத்துக்கொள்கிறது என்று நீ சந்தேகிக்கக் கூடும். மீன் தன் வாயால் உட்கொண்டு, செவுள் வழியாகக் கழித்துவிடுகிற ஜலத்தைத் தனியாகப் பிடித்துப் பரிசோதித்தால், அது, நன்ருய்க் காய்ச்சிக் காற்றுப் புகாமல் ஆறவைத்த ஜலத்தைப்போல், வாயுவேயில்லாத வெறும் தண்ணீராக இருப்பதைக் காணலாம். காய்ச்சி ஆறின தண்ணீரில் ஒரு மீனை விட்டால், அது உயிர்வாழாமல் இறந்துவிடும்; அப்படியே, மீன் உட்கொண்டு செவுளின் வழியாகக் கழித்துவிட்ட ஜலத்தில் வேறு ஒரு மீனை விட்டால் அதுவும் உயிர்வாழாமல் இறந்துவிடும். இதனுல் வாயுவோடு கலந்த ஜலத்தில்மட்டும் மீன் உயிருடன் வாழும் என்பதும், அந்த ஜலத்திலுள்ள வாயுவை மீன் தன் செவுளிலுள்ள நுண்ணிய இரத்த நாளங்களினுல் வேறு பிரித்துக் கிரகித்துக்கொள்ளுகிறது என்பதும் நன்கு விளக்கமாகின்றன.

8. இது நிற்க, தண்ணீரிலுள்ள மீனைப்பிடித்துத் தரையிற்போட்டால், அது என்னசெய்கிறது? கொஞ்ச நேரம் துள்ளித் துடித்து, பிறகு இறந்துவிடுகிறது. துள்ளும்போது என்ன செய்கிறது? செவுளின் மூடியைத் தன்னுல் கூடியமட்டும் திறந்து திறந்து மூடுகின்றது. சுவாசிப்பதற்கு வேண்டிய பிராணவாயு எங்கும் பரவி யிருக்கிறபோது, தரையிற் போடப்பட்ட அந்த மீன் ஏன் இறந்துவிடவேண்டும் என்னும் சந்தேகம் உனக்கு உண்டாகலாம். அதற்குக் காரணம் சொல்லுகிறேன் கேள்: தண்ணீரிலுள்ள வாயு குளிர்ச்சியானது, தரையிலுள்ள வாயு சூடானது. இந்தச் சூடான வாயுவை அந்த மீன் சுவாசிக்கும் பொழுது

செவுள்கள் வறண்டு ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளும். அதனால் அது மேலும்மேலும் மூச்சு விடுவதற்கின்றி மரணத்தை அடைகின்றது. மற்ற ஜந்துக்கள் நீரில் முழுகும்போது ஜலத்திலுள்ள வாயுவை சுவாசித்து உயிர்வாழ முடிவதில்லை; அப்படியே மீன் நிலத்திலுள்ள வாயுவை சுவாசித்து உயிர்வாழ முடிவதில்லை. அன்றியும், மீனின் உடல் ஜலத்தில் வசிப்பதற்கு ஏற்றவாறு வழுவழுப்பான ஒருவகைப் பசையை அடைந்திருக்கிறது. அந்தப் பசை வெப்பத்தினால் உலர உலர மீனுக்கு உடல் சுருங்க, அது மரணாவஸ்தையை அடைகின்றது. இதுவுமன்றி, மீனின் இரத்தம் குளிர்ச்சியானது. இந்த இரத்த வோட்டத்திற்குக் குளிர்ந்த வாயுவே தக்கது. உஷ்ணவாயு அதற்கு முற்றும் விரோதமானது.

9. இந்தக் காரணங்களினால்தான், தண்ணீரிலுள்ள மீனைத் தரையிற் போட்டால், அது கொஞ்சநேரத்திற்கெல்லாம் இறந்து விடுகின்றது. தரையிற்போடப்பட்ட மீன் இறந்துவிடுவதற்கு முன்னமே, அதை மறுபடியும் தண்ணீரிற் போட்டால், அது உடனே நீந்த ஆரம்பிக்காமல், கொஞ்சங்கொஞ்சமாக அசைந்து அசைந்து, அதன் பிறகே அது நன்றாய் நீந்த ஆரம்பிக்கும். இதற்குக் காரணம் யாது? உஷ்ண வாயுவினால் வறண்டுபோன செவுள்கள் தண்ணீரில் நனைந்து நன்றாய் அசைய ஆரம்பிக்கும் வரையில், அது நன்றாய் நீந்த முடிவதில்லை. செவுள்கள் பழைய நிலையை அடைந்தவுடன், அந்தமீன் நன்றாய் நீந்துகிறது. ஆகையால் மீன் தண்ணீரில் மட்டும் வசிப்பதற்கென்றே சிருஷ்டிக்கப்பட்ட ஜந்து என்பது நமக்கு நன்கு விளங்குகின்றது.

## 15. ஆளவந்தார்

சோழநாட்டில் வீரநாராயணபுரம் என்னும் திருப்பதியில், சுமார் தொளாயிரம் யாண்டுகட்குமுன்னர், ஈசுவரமுனிகள் என்பவருக்கு யமுனைத்துறைவர் என்னும் புதல்வர் ஒருவர் இருந்தனர். அவரை, ஆளவந்தார் என்றும், யாமுனாசாரியர் என்றும் பெரியோர் கூறுவர். யமுனைத்துறைவர் தம் கல்விப் பெருமையினால் மிக்க புகழ் படைத்திருந்தனர். சோழனது சம்ஸ்தான பண்டிதரை வாதில்வென்று சோழநாட்டில் ஒரு பாகத்தைப் பரிசிலாகப் பெற்றனர் என்று கூறுகின்றனர். அக் காரணத்தாலேயே அரசன் தேவியார் அவருக்கு ஆளவந்தார் என்று பெயரிட்டு அழைத்தனர் என்ப.

2. ஆளவந்தார், வைணவசமய குரவர்களில் தலைவராய் விளங்கிய ஸ்ரீமந் நாதமுனிகளுக்குப் பௌத்திரர். நாதமுனிகள், 'எமக்குப்பின் ஆளவந்தானே வைணவ சமயத்திற்குத் தலைமை பூண்டு அம்மத சித்தாந்தத்தை நிலைபெறச் செய்வான்' என்று, தம் சீடர்களுக்குத் தெரிவித்திருந்தனர். அன்றியும், தம் சீடர்களாகிய உய்யக்கொண்டார் முதலியவர்களை நோக்கி, 'நீவிர் எம்மிடத்துக் கேட்ட இரகசியார்த்தங்களை எம்முடைய பேரனுக்கு அறிவிக்கக் கடவீர்' என்றுங் கட்டளை யிட்டிருந்தனர். உய்யக்கொண்டார் தம் அந்திம காலத்தில், தம் சீடரான மணக்கால்நம்பிகளுக்கு, ரகஸ்யார்த்தங்களைக் கூறியருளியபின், திருநாட்டை அலங்கரித்தனர்.

3. பின்பு, மணக்கால் நம்பிகளே ஆளவந்தாருக்கு ஆசாரியராயினர். ஆளவந்தார் பெருஞ் செல்வராய்

வாழ்ந்திருக்குஞ் செய்தியைக் கேட்டு, மணக்கால்-நம்பிகள் அவரைக் காண விரும்பி, அவர் வசித்திருந்த ஊரை யணுகி, அவரது திருமாளிகையை யடைந்தனர். அந்தத் திருமாளிகை கட்டும் காவலும் உடையதாய் விளங்கியிருந்தது. மணக்கால் நம்பி அங்கே பலநாள் காத்திருந்தும், அத் திருமாளிகையின் உள்ளே செல்-லுதற்குச் சமயம் வாய்க்கவில்லை. முடிவில், அவர் ஓர் உபாயத்தால் உள்ளே சென்று, ஆளவந்தாரைக் கண்டனர்.

4. ஆளவந்தார் மணக்கால்நம்பிகளைக் கண்ட-வுடன், அவருடைய திருவடியில் தம் முடிபட விழுந்து வணங்கினர்; பின்பு எழுந்து நின்று நம்பிகளை நோக்கி, 'தேவரீர் அடியேனிடத்து விரும்புவது யாது? பொன்னோ? பொருளோ? பூமியோ?' என்று பணி-வோடும் வினவினர். 'நான் உம்மிடத்து ஒன்றும் விரும்பி வந்தேன் அல்லேன்; உம்முடைய பெரி-யோர்கள் தேடி வைத்த பழம்பொருள் என்னிடத்தே உள்ளது; அதனைப் பெறுதற்கு உரியவர் நீரே; ஆத-லால், அதனை நீர் வந்து பெற்றுக்கொள்ளவேண்டும்' என்றார் மணக்கால் நம்பிகள். அதனைக் கேட்ட ஆளவந்தார், 'ஆயின், தேவரீர் திருவுள்ளப்படியே யாகுக' என்று, மிக்க வணக்கத்துடன் கூறினர்.

5. மணக்கால் நம்பிகள் மிக்க மகிழ்ச்சிகொண்டு, ஆளவந்தாருக்கு விதிப்படி பஞ்சசம்ஸ்காரம் முதலிய-வற்றைச் செய்து, கீதை முதலிய ரகஸ்யார்த்தங்களை அவருக்கு உபதேசஞ் செய்துகொண் டிருந்தனர்.

6. இவ்வண்ணம் சில நாட்கள் செல்ல, ஒரு நாள், நம்பிகள் ஆளவந்தாரைப், பெரிய கோயில் என்று

பெயர்பெற்ற திருவரங்கத்துக்கு அழைத்துச் சென்று, அங்கே, பாம்பணையின்மேல் பள்ளிகொண் டிருக்கும் பரந்தாமன் திருவடிகளை ஆளவந்தாருக்குக் காட்டி, 'இதுவே உமது பெரியோர்களுடைய தனம்' என்று அருளிச் செய்தனர். அது கேட்ட ஆளவந்தார், எம்பெருமானை வாயார வாழ்த்தி மெய்மறந்திருந்தார். பின்பு, அவர் இவ்வுலக வாழ்க்கை நிலையற்றதெனக் கண்டு வெறுத்து, சந்நியாசம் பூண்டு, எம்பெருமான் திருவடிகளுக்கே தொண்டுபுரிந்து வந்தனர்.

7. இவ்வண்ணம் துறவு பூண்ட ஆளவந்தார், ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்து, வைணவ சமயத்திற்குத் தலைவராய் விளங்கி, பல வடமொழி நூல்களை இயற்றி யருளினர். அன்றியும், தம் சீடர்களான பெரியநம்பிகள், திருக்கோட்டியூர்நம்பிகள் முதலிய பெரியார் பலருக்கும் வைணவ மத சித்தாந்தத்தைப் போதித்து வந்தனர். இப்படிச் சிறிது காலஞ்செல்ல, ஆளவந்தார் தம் உடல் மெலிவடைதலைக் கண்டு, தமக்குப் பின்பு தலைவராகத் தக்கவர் எவர் என்பதைப்பற்றிச் சிந்திப்பாரானார். அப்போது காஞ்சீபுரத்தினின்றும் வந்த தேசாந்திரிகளில் சிலர் யாதவப்பிரகாசர் என்னும் சந்நியாசியிடம் வேதாந்தங்கற்கும் இராமாநுஜரது அறிவு ஆற்றல் ஒழுக்கம் முதலியவற்றைப் பற்றி வியந்து பேசினர். அன்றியும் அவர், 'தம் ஆசிரியரைக் காட்டிலும் ஆயிரமடங்கு தேர்ச்சி யடைந்தவர்' என்றும் தெரிவித்தனர்.

8. அதுகேட்ட ஆளவந்தார், உடனே பயணங்கொண்டு, காஞ்சிபுரத்திற்குச் சென்றார். அப்போது பெருமாளைத் தரிசிக்கும்படி யாதவப் பிரகாசர் தம்

சீடர்களுடன் வரதராஜப் பெருமான் சந்நிதிக்குச் சென்றிருத்தலைக் கேள்வியுற்று, ஆளவந்தாரும் அக் கோயிலுக்குச் சென்றார். அங்கு இராமாநுஜர், யாதப் பிரகாசரது சீடர்களுக்கிடையே, உடுக்கூட்டங்கட்கு நடுவே ஒளிரும் மதியம்போல், விளங்கியிருந்தனர். ஆளவந்தார் இராமாநுஜரது தோற்றத்தைக் கண்டு, 'இவரே நம் தரிசனத்திற்குத் தலைவராகத் தக்கவர்' என்று துணிந்து, உள்ளத்தே உவகை கொண்டனர்.

9. அப்போது இராமாநுஜரைக் கண்டு வார்த்தையாட ஆளவந்தாருக்குச் சமயம் வாய்ந்திலது; பின் ஒருகால் அவரைக் கண்டுகொள்ளலாம் என்று எண்ணி, அருளாளன் திருவடிகளை அன்புடன் வணங்கி வாழ்த்திக்கொண்டு, திரும்பித் திருவரங்கம் சென்றடைந்தனர். தமக்கு அந்திமகாலம் அணுகுதலை யறிந்து, ஆளவந்தார், தம் சீடரான பெரியநம்பிகளை நோக்கி, 'நீர் காஞ்சீபுரம் சென்று, இராமாநுஜரை அழைத்து வருவீர்' என்று நியமித்தார். பெரிய நம்பிகள் காஞ்சீபுரம் சென்று, இராமாநுஜரை அழைத்துக்கொண்டு திரும்பிவருவதற்குள், ஆளவந்தார் திருநாட்டை யலங்கரித்தனர். இராமாநுஜர் அதனை யறிந்து பெரிதும் வருந்தினர். பின்பு பெரியநம்பிகளே இராமாநுஜருக்கு ஞானசாரியராக அமைந்தனர். அமைந்தாரேனும், இராமாநுஜருக்கு ஆளவந்தாரே ஆசாரியார் என்பது பெரியோர் கொள்கை.

## 16. திருமண வாழ்த்து

அரனவ னிடத்திலே ஐங்கரன் வந்துதான்
ஐயஎன் செவியை மிகவும்
அறுமுகன் கிள்ளினன் என்றே சிணுங்கிடவும்
அத்தன் வேலவனை நோக்கி

விரைவுடன் வினவவே அண்ணன்என் சென்னியில்
விளங்குகண் எண்ணினன் என
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்துநீ அப்படி
விகடமேன் செய்தாய்என

மருவுஎன் கைந்நீள முழமளந் தான்என்ன
மயிலவன் நகைத்து நிற்க
மலையரயன் உதவவரும் உமையவளை நோக்கிநின்
மைந்தரைப் பாராய் என

கருதரிய கடலாடை உலகுபல அண்டம்
கருப்பமாப் பெற்ற கன்னி
கணபதியை அருகழைத் தகமகிழ்வு கொண்டனள்
களிப்புடன் உமைக் காக்கவே.

## 17. ஆகாரம்

ஆகாரம் இன்றி வேறு எவ்விதத்தாலும் எவரும் உலகில் உயிர்வாழ்ந்திருத்தல் கூடாதகாரியம். மாறு-பாடான உணவுகளாலேயே அனேக சந்தர்ப்பங்களில் மாந்தர் உயிரிழக்க நேரிடுகிறது. ஆகையால், ஒவ்-வொருவரும் ஆகாரங்களின் குணதோஷங்களையும், அவற்றின் அளவினையும் அறிந்து, அவைகளை நியமமாக அருந்துதல் அவசியமேயாகும். ஆகார நியமத்தால் நம் முன்னோர்கள் தேகாரோக்கியம் உள்ளவர்களாய் நெடுங்காலம் ஜீவித்துவந்தார்கள். இக்காலத்திலோ அகாலமரணத்தின் தொகை நாளுக்கு நாள் அதிகப்-பட்டுக்கொண்டே வருகின்றது. நம்முடைய தேகத்-திற்கும், சீதோஷ்ண நிலைமைக்கும் தக்கபடி, நம் தாய் தந்தையர்கள் கடைப்பிடித்து வந்த ஆகார நியமங்களுக்கு மாறுபாடான உணவு ஒழுக்கங்களை நாம் கைப்பற்றி வருவதே மேற் கூறிய அகால மர-ணத்திற்கு முக்கிய காரணமாகும். இந்நிலைமையில் நம் முன்னோர் கைக்கொண்ட முறைகளையே நாமும் அனுசரிப்போமானல், நாம் உள்ள நாள் அளவும் நோயற்ற வாழ்வாகிய குறைவற்ற செல்வத்தைப் பெறலாம். இதுபற்றியே தெய்வப் புலமைத் திரு-வள்ளுவனாரும்,

'மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை உயிர்க்கு'

என்று கூறியருளினர். ஆகவே, அவரவர்களுடைய தேகத்தின் ஜாடராக்கினிக்குத் தக்கவாறு ஜீர்ண-மாகும் கடின திரவியங்களாகிய கோதுமை கடலை முதலியவைகளையும், எளிதில் ஜீரணமாகும் நெல்லரிசி

முதலியவைகளையும், பக்குவப்படுத்தி நியம ஆகாரங்களாக அமைத்துக்கொள்ளுதல் நலமாகும்.

2. மேற் கூறியவற்றுள் கடின தானியங்களாகிய கோதுமை முதலியன நிலம் நீர் என்னும் இவ்விரண்டு பூதங்களினுடைய ஆதிக்கியத்தையும், மிருதுவான தானியங்களாகிய நெல்லரிசி முதலியன வாயு அக்கினி என்னும் இவ்விரண்டு பூதங்களினுடைய ஆதிக்கியத்தையும் வகித்திருக்கின்றன.

3. இக் காரணங்களால் மிருதுவான ஆகாரங்கள் சாமானிய ஜாடராக்கினியால் காலந்தாழ்த்தாது எளிதில் ஜீர்ணமாகி விடுகின்றன. கடின ஆகாரங்கள் இதற்கு மாருக அதிக அக்கினியை அவாவிக்கொண்டிருக்கின்றன. எவ்விதமான கடின பதார்த்தங்களையும், மிக்க உழைப்பாளிகள் அல்லாத மற்றவர்கள் உண்ணலாகாது. அன்னுசயமாகிய இரைப்பையைக் கடின பதார்த்தங்களானல் அரைப்பங்களவும், மிருதுவான பதார்த்தங்களானல் அரைப் பங்கிற்குக் கொஞ்சம் அதிகமாகவும் நிறைத்து, கால்பங்கு நீர் நிறைத்து, மற்றக் கால்பாகத்தை அவ்வாகாரங்கள் ஜீர்ணமாகும் பொருட்டுக் காலியாக விடவேண்டும் என்பது ஆயுர்வேத பண்டிதர்களுடைய துணிபு. இங்குக் கூறிய அளவினையும், பதார்த்தங்களின் குணதோஷங்களையும் கருதாது, மன வேட்கை தீருமாறு வயிறு கொண்ட மட்டும் நிரப்புவார்களானல்,

'இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான்கண் நோய்.'

என்ற தேவர்வாக்கிற்கு ஏற்ப, அவர்கள் மிருகங்களுக்கு ஒப்பாவார்கள். அன்றியும், வைத்தியர்களை

இடை விடாத உடனுறையும் துணைவர்களாகவும் அமையப்பெற் றிருப்பார்கள் என்பது யாவராலும் மறுக்கக்கூடாத உண்மையாம்.

4. நியம ஆகாரங்களில் மாறுபடாமல் கால நியதியை அநுசரித்துப் புசிப்பவனுடைய ஜாடராக்கினி, எவ்விதச் சங்கடத்திற்கும் உட்படாமல், பலம் காந்தி உற்சாகம் சுகம் முதலியவைகளைப் பெருகச்செய்யும். சூரியோதயம் முதல் மறுநாள் சூரியோதயம் வரையில் அன்னுசயத்திற்குய, ஜாடராக்கினிக்கும சிறிதும் ஒழிவில்லாமலிருக்கும்படி அளவுகடந்து புசிப்பது சகல ரோகங்களுக்கும் மூலமாகும். இதனை,

> 'தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
> நோயள வின்றிப் படும்;'

என்று வள்ளுவரும் வற்புறுத்துவர். இந்தப் பயத்தினால் குறைந்த ஆகாரம் கொள்ளுவதும் கூடாது; கொண்டோமானால், பலம், காந்தி முதலியவை குறைவதோடு, வாத ரோகங்களுக்கும் அது பிறப்பிடமாகிவிடும். ஜீர்ண சக்தியையும், கால இயல்பையும் அநுசரித்துக் கடின ஆகாராதிகளை மிதமாகப் புசித்தல் உசிதமாகும்.

5. அன்றியும், பதார்த்தங்களின் குணதோஷங்களை நன்றாய் அறிந்து, தமக்குப் பிரியமானவர்களால் சமைக்கப் பட்டதும், பக்குவம் அமைந்ததும் ஆன உருசியுள்ள உணவுகளை அவ்வக் காலங்களுக்கு ஏற்றவாறு உட்கொள்ளுதலே உத்தமம். உண்ட உணவு ஜீர்ணமாகுமளவும் வேறு எவ்வகைய ஆகாரமும் உட்கொள்ளலாகாது. ஜாடராக்கினி குறைந்தவர்கள் கடின பதார்த்தங்களை உண்ணுதல் கூடாது.

ஜாடர சக்தி மிக்கவர்கள் எப்பொழுதும் நியதியான ஆகாரமுடையவர்களாய் இருத்தல் வேண்டும். அதிக கடின பதார்த்தங்களையும், அஜீர்ணகாரணமான ஆகாரங்களையும் தினந்தோறும் உபயோகித்தல் கூடாது. இவ் விதிகளை அனுசரித்து இவற்றைக் கடைப்பிடித்து ஒழுகுவார்களானால்,

'அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு.'

என்ற முதுமொழிக் கிணங்க, நெடுங் காலம் சுக ஜீவிகளாய் வாழ்ந்திருப்பார்கள் என்பது திண்ணம்.

## ஆரோக்கியத்திற்கு அமைந்த நியமங்கள்

பிரதி தினமும் மாலைநேரங்களில் சுகந்தமும் துர்கந்தமும் இல்லாத பரிசுத்தமான காற்றை, 20 அல்லது 22 தரம் கம்பீரமாகச் சுவாசித்து விடவேண்டும். அதனால் சுவாசாஸய சம்பந்தமான வியாதிகள் நீங்கும்.

2. இரவில் தூங்குவதற்கு முன்னும், காலையில் தூங்கி எழுந்த பின்னும் குளிர்ந்த நீரால் கண்களை அலம்பிக்கொள்ளுதல் நலம். இது நேத்திரரோகங்கள் வரவொட்டாமல் தடுக்கும்.

3. நெடுந்தூரம் நடத்தலும், தன் சக்திக்கு அதிகமாக உழைத்தலும், இரவில் நெடுநேரம் கண்விழித்தலும் நோயை உண்டு பண்ணும்.

4. வேம்பு, வேல், ஆல் முதலிய கசப்புள்ளதும், துவர்ப்புள்ளதுமான குச்சிகளால் பல் துலக்குதல் நல்லது.

5. இரவில் படுத்துக்கொள்வதற்கு முன் பல்லை நன்ருகத் தேய்த்து வாயைக்கொப்புளிக்க வேண்டும்.

6. சூரியோதயத்திற்கு முன்பே குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்தல் ஆரோக்கியகரமானது.

7. நாள்தோறும் தலையில் கொஞ்சம் எண்ணெய் தேய்த்துக்கொண்டு, வெது வெதுப்பான வெந்நீரில் ஸ்நானம் செய்தல் மிகவும் நல்லது.



# கதையை ஒட்டிய செய்யுட்கள்

## 1. குரங்கு ஆப்பைப் பிடுங்கினது

அடாததோர் செய்கை தன்னை
அறிவிலா தியற்று மாந்தர்
மடாலயப் பணிக்குத் தச்சன்
மரத்தினை அறுத்து நாப்பண்
கடாவிய முளையை ஈர்த்துக்
கலங்கிய மந்தி யேபோல்
படாததோர் பாடு பட்டுப்
பரிபவம் உறுவர் அன்றே

## 2. நரி சத்தங் கேட்டு அஞ்சியது

பெரியதோர் உருவு கண்டும்
பெரியதோர் சத்தங் கேட்டும்
தெரியகில் லாமல் நெஞ்சம்
திடுக்குறும் பேதை மாந்தர்
நரியனுர் சத்தங் கேட்டே
நடுங்கித்தன் இரையை விட்டுத்
திரியவே நேர்ந்த தேபோல்
சீர்குலைந் தலைகு வாரே.

## 3. ஆஷாடபூதி பொருளிழந்தது

நல்லவூண் உண்டி டாமல்
நல்லுடை உடுத்தி டாமல்
புல்லிய தேனீப் போலப்
பொருளினைச் சேர்க்கும் மாந்தர்

அல்லலார் தேவ சன்மன்
ஆஷாட பூதி தன்னால்
எல்லையில் பொருளி ழந்த
இன்னலே எய்து வாரே.

4. காகம் பாம்பைக் கொன்றது

பகைவனோர் பலவான் ஆயின்
பார்த்தவற் கஞ்சா தந்தப்
பகைவனிற் பலவா னாலே
பகையினை வேறல் வேண்டும்
மிகையுறு முட்டை யெல்லாம்
விழுங்கிய பாம்பைக் காகம்
நகையினைப் பொந்தி லிட்டந்
நாகத்தைக் கொன்ற தன்றே.

5. கொக்கு நண்டைக் கொன்றது

வஞ்சகத் தாலே வெல்லும்
வஞ்சகர் தம்மை மற்றோர்
வஞ்சகத் தாலே வேறல்
வஞ்சகம் அன்று கண்டாய்
கொஞ்சியே குளத்தில் வாழ்மீன்
குழுவினைக் கொன்ற கொக்கை
வஞ்சகத் தாலோர் நண்டு
மரித்திடச் செய்த தன்றே

6. முயல் சிங்கத்தைக் கொன்றது

வலியதோர் பகையா னாலும்
மருவுநற் சூழ்ச்சி வல்லோர்
நலியஅப் பகையை வென்று
நலத்தினை அடைந்து வாழ்வார்

வலியதோர் சிங்கந் தன்னை
வனமுயல் சூழ்ச்சி யாலே
இலைமலி பாழ்ங்கி ணற்றுக்
கிரையெனச் செய்த தாலே

## 7. மூட்டைப்பூச்சிக்கு இடம் கொடுத்த சீலைப்பேன் இறந்தது

குணத்தினை யறிந்தே நட்புக்
கொண்டிட வேண்டும் இன்றேல்
மணந்தபின் தீநட் பாலே
வருவதிங் கல்ல லேயாம்
இணங்கிய மூட்டைப் பூச்சிக்
கிடந்தந்த சீலைப் பேன்ஓர்
கணந்தனில் மரண முற்ற
கதையினை அறியார் யாரே.

## 8. நரி ஒட்டகத்தைக் கொன்றது

இனமிலா தவரைக் கூடின்
இன்னலே விளைவ தாகும்
சினமுறும் புலியி னேடுஞ்
சிறுநரி காகம் கூடி
மனமிலா ஒட்ட கத்தை
மதோற்கடச் சிங்கத் தாலே
வனமதிற் கொன்ற காதை
வகுத்திடும் இதனை நன்றே.

### 9. சிட்டு கடலை வென்றது

பெரியருக் கடிமை யுற்ருல்
சிறியரும் பெருமை யுற்று
அரியதம் பகையை வெல்லும்
ஆண்மையை அடைதல் திண்ணம்
உரிமையால் கருடற் காளாய்
உற்றதோர் சிட்டும் அந்தப்
பரவையை அடக்க மாலைப்
பரிவினிற் கொணர்ந்த தாலே.

### 10. அன்னத்தின் சொற்கேளாமல் ஆமை யிறந்தது

தனக்கிதம் நாடும் நண்பன்
சாற்றிடும் உரையைக் காவான்
மனக்கிலே சத்தால் தன்னோர்
வாழ்வையும் இழந்தோ னவான்
அனத்தின்நற் சொற்கா வாத
ஆமையும் அறிவி ழந்து
சனத்திரள் நடுவண் வீழ்ந்து
சாவினை யடைந்த தன்றே.

### 11. வந்தபின் காப்போன் மரித்தது

வருவது வழியில் நில்லா
வந்தபின் பார்ப்போம் என்பார்
பெரியதோர் துன்ப முற்றுப்
பேதைய ராகி நைவர்
வருமுனம் வருங்கால் காப்போர்
வாழ்ந்தனர் வந்த பின்னர்
மருகுறக் காப்போன் என்னும்
மச்சமே மரித்த தந்தோ.

12. தூக்கணாங்குருவி குரங்கினால் துயரடைந்தது

கயவருக் குறுதி யான
காரியம் கருதிச் சொல்வோர்
பயனிலா தவரால் அன்னோர்
பரிபவம் அடைதல் திண்ணம்
மழையினால் வருந்தி நின்ற
மந்திகட் குறுதி கூறி
அயர்வினால் தூக்க ணங்கள்
அல்லலே அடைந்த அம்மா.

---

சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிய

# நன்னெறி

என்று முகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள்கொடுப்பார் தீதற்றோர்-துன்றுசுவை
பூவிற் பொலிகுழலாய் பூங்கை புகழ்வோ
நாவிற் குதவும் நயந்து. (1)

மாசற்ற நெஞ்சுடையார் வன்சொ லினிதேனையவர்
பேசுற்ற இன்சொல் பிறிதென்க — ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ நன்னுதால் ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு. (2)

பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும் — பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு. (3)

நீக்க மறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கி னவர்பெருமை நொய்தாகும் — பூக்குழலாய்
நெல்லி னுமிசிறிது நீங்கிப் பழமைபோல்
புல்லினுந் திண்மைநிலை போம். (4)

காதன் மனையாளும் காதலனும் மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே — ஓதுகலை [மால்
எண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்கு
கண்ணிரண்டு மொன்றையே காண் (5)

கடலே யனையம்யாம் கல்வியா லென்னும்
அடலே றனைபசெருக் காழ்த்தி — விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்
பனிக்கடலு முண்ணப் படும். (6)

உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க — வெள்ளம்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு (7)

மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்
வலியோர் தமைத்தாம் மருவின் — பலியேல்
கடவு ளவிர்சடைமேல் கட்செவியஞ் சாதே
படர்சிறைய புள்ளரசைப் பார்த்து. (8)

தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர் — திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகில்
நிறையிருளை நீக்குமேல் நின்று. (9)

பொய்ப்புலன்க ளைந்துநோய் புல்லியர்பா லன்றியே
மெய்ப்புலவர் தம்பால் விளையாவாம் — துப்பின்
சுழற்றுங்கொல் கற்றாணைச் சூறு வளிபோய்
சுழற்றுஞ் சிறுபுன் துரும்பு. (10)

வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பில்
பொருந்துதல் தானே புதுமை — திருந்திழாய்
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு. (11)

தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோ மென்று
தலையா யவர்செருக்குச் சார்தல் — இலையால்
இரைக்கும்வண் டூதுமலர் ஈர்ங்கோதாய் மேரு
வரைக்குவந் தன்று வளைவு. (12)

இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவனமற்
றெல்லா மிருந்துமவற் கென்செய்யும் — நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூல் தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு. (13)

தம்மையும் தங்கள் தலைமையையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர் — தம்மின்
இழியினுஞ் செல்வர் இடர்தீர்ப்பர் அல்கு
கழியினுஞ்செல் லாதோ கடல். (14)

எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ — பைந்தொடீஇ
நின்று பயனுதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்றும் உதவும் கனி. (15)

இன்சொலா லன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலா லென்றும் மகிழாதே — பொன்செய்
அதிர்வளையாய் பொங்கா தழற்கதிரால் தண்ணென்
கதிர்வரவாற் பொங்குங் கடல். (16)

நல்லோர் வரவான் நகைமுகங்கொண் டின்புறீஇ
அல்லோர் வரவான் அழுங்குவார் — வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழல்கால் வர. (17)

பெரியவர்தந் நோய்போற் பிறர்நோய்கண் டுள்ளம்
எரியி னிழுதாவ ரென்க — தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண். (18)

எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும்
எழுத்தறிவார்க் காணி னிலையாம் — எழுத்தறிவார்
ஆயுங் கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில்
வீயுஞ் சுரநீர் மிகை. (19)

ஆக்கு மறிவா னலது பிறப்பினல்
மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க — நீக்கு
பவரா ரரவின் பருமணிகண் டென்றும்
கவரார் கடலின் கடு. (20)

உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே — வண்டுமலர்ச்
சேக்கை விரும்புஞ்செழும்பொழில்வாய் வேம்பன்றோ
காக்கை விரும்புங் கனி. (21)

கல்லா அறிவிற் சயவர்பாற் கற்றுணர்ந்த
நல்லார் தமதுகன நண்ணரே — வில்லார்
கணையிற் பொலியுங் கருங்கண்ணாய் நொய்தாம்
புணையிற் புகுமொண் பொருள். (22)

உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார் — படவரால்
கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரொளிதன்
விண்ணளவா யிற்றோ விளம்பு. (23)

கைம்மா றுகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மா லியலுதவி தாஞ்செய்வர் — அம்மா
முளைக்கு மெயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதா மென்று. (24)

முனிவினும் நல்குவர் மூதறிஞ ருள்ளக்
கனிவினும் நல்கார் கயவர் — நனிவிளைவில்
காயினு மாகுங் கதலிதான் எட்டிபழுத்
தாயினு மாமோ அறை. (25)

உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் தற்றோர்
அடுக்கு மொருகோடி யாக — நடுக்கமுறார்
பண்ணீற் புகலும் பனிமொழியா யஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான். (26)

கொள்ளுங் கொடுங்கூற்றங் கொல்வான் குறுகுதன்முன்
உள்ளங் கனிந்தறஞ்செய் துய்கவே — வெள்ளம்
வருவதற்கு முன்னர் அணைகோலி வையார்
பெருகுதற்க ணென்செய்வார் பேசு. (27)

பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார் — நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன்கோ லடிதன்மேல்
கைசென்று தாங்குங் கடிது. (28)

பன்னும் பனுவற் பயன்றே ரறிவிலார்
மன்னும் அறங்கள் வலியிலவே — நன்னுதால்
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றான். (29)

எள்ளா திருப்ப இழிஞர்போற் றற்குரியர்
விள்ளா அறிஞரது வேண்டாரே — தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக்
கரைகாப் புளதோ கடல். (30)

அறிவுடையா ரன்றி யதுபெறுர் தம்பால்
செறிபழியை யஞ்சார் சிறிதும் — பிறைநுதால்
வண்ணஞ்செய் வாள்விழியே யன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோவிருளைக் கண்டு. (31)

கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
மற்றையர்தா மென்று மதியாரே — வெற்றிநெடு
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம். (32)

தக்கார்க்கே யீவர் தகார்க்களிப்பா ரில்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர் — எக்காலும்
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய். (33)

பெரியார்முற் றன்னைப் புனைந்துரைத்த பேதை
தரியா துயர்வகன்று தாழும் — தெரியாய்கொல்
பொன்னுயர்வு தீர்த்த பொலிகுழலாய் விந்தமலை
தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து. (34)

நல்லார் செயுங்கேண்மை நாடோறும் நன்றாகும்
அல்லார் செயுங்கேண்மை யாகாதே — நல்லாய்கேள்
காய்முற்றிற் றின்றீங் கனியாம் இளந்தளிர்நாள்
போய்முற்றின் என்னாகிப் போம். (35)

கற்றறியார் செய்யுங் கடுநட்புந் தாங்கூடி
உற்றுழியுந் தீமைநிகழ் வுள்ளதே — பொற்றொடீஇ
சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூமலர்ந்த
அன்றே மணமுடைய தாம். (36)

பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னு மறிஞரைத்தா மற்றொவ்வார் — மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே அதுபுனையாக்
காணுங்கண் ணொக்குமோ காண். (37)






Printed at the 'Caxton Press,' Madras — 1925.

## ஸி. குமாரஸாமி நாயுடு ஸன்ஸ்

### மேரி ராணி வாசக புஸ்தகங்கள்

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| முதல் வகுப்பு ... ... ... | 0 | 2 | 0 |
| இரண்டாம் வகுப்பு ... ... ... | 0 | 3 | 0 |
| மூன்றும் வகுப்பு ... ... ... | 0 | 3 | 6 |
| நான்காம் வகுப்பு ... ... ... | 0 | 4 | 0 |
| ஐந்தாம் வகுப்பு ... ... ... | 0 | 6 | 0 |

### சொற்றொடர் ஆக்கம்

| | | | |
|---|---|---|---|
| முதல் புத்தகம் ... ... ... | 0 | 2 | 0 |
| இரண்டாம் புத்தகம் ... ... ... | 0 | 3 | 0 |
| மூன்றும் புத்தகம் ... ... ... | 0 | 6 | 0 |

### இலக்கணங்கள்

| | | | |
|---|---|---|---|
| சிற்றிலக்கண வினு விடை I-4-ஆம் வகுப்பு ... | 0 | 3 | 0 |
| சிற்றிலக்கணம்—II -முதல் பாரத்திற்கு ... | 0 | 4 | 6 |
| சிற்றிலக்கணம்—III-இரண்டாம் பாரத்திற்கு | 0 | 6 | 0 |
| சிற்றிலக்கணம்—IV-மூன்றும் பாரத்திற்கு ... | 0 | 8 | 0 |

### மூன்றும் வகுப்புப் பூகோளங்கள்

| | | | |
|---|---|---|---|
| சென்னபட்டணம் ஜில்லா ... ... | 0 | 5 | 0 |
| செங்கற்பட்டு ஜில்லா ... ... ... | 0 | 6 | 0 |
| தென் ஆற்காடு ஜில்லா ... ... | 0 | 6 | 0 |
| கோயமுத்தூர் ஜில்லா ... ... ... | 0 | 6 | 0 |
| தஞ்சாவூர் ஜில்லா ... ... ... | 0 | 5 | 0 |
| மதுரை ஜில்லா ... ... ... | 0 | 5 | 0 |
| இராமநாதபுரம் ஜில்லா ... ... | 0 | 5 | 0 |
| திருநெல்வேலி ஜில்லா... ... ... | 0 | 6 | 0 |
| சேலம் ஜில்லா ... ... ... | 0 | 6 | 0 |
| வட ஆற்காடு ஜில்லா ... ... ... | 0 | 6 | 0 |

Caxton Press, Madras.